# கைவல்ய உபநிஷதமும் தமிழில் விளக்கமும்



வி.ஆர். கணேசன் M.A., IRAS (Retd.)

மணிமேகலைப் பிரசுரம்

# கைவல்ய உபநிஷதமும் தமிழில் விளக்கமும்

(ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் மூலமும்,
ஆசார்ய சங்கரானந்தரின் தீபிகையைத் தொடர்ந்த
மொழி பெயர்ப்பும், குறிப்புகளும் கூடியது.)


ஆசிரியர்

வி.ஆர். கணேசன், M.A IRAS (Retd.)





மணிமேகலைப் பிரசுரம்

தபால் பெட்டி எண்: 1447
4 தணிகாசலம் சாலை
தியாகராய நகர், சென்னை 600 017
தொலைபேசி: 4342926
தொலைநகல்: 044-4346082
மின் அஞ்சல்: tambhi@md2.vsnl.net.in

## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | கைவல்ய உபநிஷதமும் தமிழில் விளக்கமும் |
| ஆசிரியர் | : | வி. ஆர். கணேசன் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்புஆண்டு | : | 1999 |
| பதிப்பு விவரம் | : | முதல் பதிப்பு |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | : | 11.2 கி.கி. |
| நூலின் அளவு | : | கிரௌன் சைஸ் (12½ 18½ செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | : | 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 56 |
| **நூலின் விலை** | : | **ரூ. 13.00** |
| அட்டைப்பட ஓவியம் | : | திரு. ஜமால் |
| லேசர் வடிவமைப்பு | : | கே.எம். டெக்னிடைப்ஸ் சென்னை - 40 ✆ 6203766 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ முருகன் ஆப்ஸெட் சென்னை - 4. |
| நூல் கட்டுமானம் | : | தையல் |
| வெளியிட்டோர் | : | மணிமேகலைப் பிரசுரம் சென்னை - 17. |




# முகவுரை

ஆத்ம ஞானத்தை அடைய ஆத்ம விசாரத்தில் ஈடுபட வேண்டும். அதற்கு உபநிஷத்துகள் இன்றியமையாத நூல்களாகும். அவை வேதங்களின் கடைசியிலிருப்பதால் வேதாந்தம் என்று கூறப்படுகிறது.

வேதாந்தத்தை வாழ்க்கையைப் பற்றிய விஞ்ஞானம் என்று சொல்லலாம். மனித வாழ்க்கையின் லட்சியம் என்ன ? மனிதன் இறந்த பின் என்னவாகிறான் ? முழுவதும் அழிந்தே போகிறானா அல்லது உடல் மட்டுந்தான் அழிவடைகிறதா ? மனிதனுக்கு மறுபிறப்பு உண்டா ? உறக்கம் என்றால் என்ன ? ஆழ்ந்த நித்திரை கொள்ளும் பொழுது மனிதன் எந்த நிலையில் இருக்கிறான் ? மோட்சம் என்பதென்ன ? இறவாமை என்றால் என்ன ? பரம்பொருள் எந்தெந்த ரூபங்களில் இருக்கிறது அல்லது ரூபமே இல்லையெனக் கொள்ளலாமா ? பரம் பொருளுடன் ஐக்கியமடைவதென்றால் என்ன ? அது எந்த விதமான அனுபவமாயிருக்கும் என்றெல்லாம் விஷயங்களைப் பற்றி மீண்டும் மீண்டும் 'சிந்தித்து ஆராய்ந்து நம் முன்னோர்களும், ராஜ ரிஷிகளும், மற்றும் பல ரிஷிகளும் தமது அனுபவங்களையும், தாமறிந்த உண்மைகளையும் குரு சிஷ்ய பரம்பரையாகவும், தகப்பன் மகனுக்கு உபதேசம் மூலமாகவும் வந்த உண்மைகளைத் தான் உபநிஷத்து மந்திரங்களாகத் தொகுக்கப் பட்டிருக்கின்றன.

உபநிஷத்துக்களில் சுட்டிக் காட்டிய உண்மைகள் தேச கால வரம்பற்றன. ஆத்ம விசாரத்தைப் பின்பற்றத் தகுந்த துணையாகவும், வழிகாட்டியாகவும் இயன்று, இவ்வாழ்க்கையிலேயே ஆசை, விருப்பு, வெறுப்புகளைக் கடந்து சமூகத்தின் விவகாரங்களில் ஈடுபட்டிருந்த போதிலும் ஜீவன் முக்தர்களாக வாழ உதவுகின்றன.

உபநிஷத்துக்கள் ஆயிரத்துக்கும் மேலான கணக்கில் இருப்பதாய்த் தெரிந்த போதிலும், அவைகளில் ஸாரமானவை 108 தான் என்று கருதப்படுகிறது. என்றாலும் ஆதிசங்கரரால் 11 உபநிஷத்துக்களே முக்கியமானவையாகவும், ஆதாரமுள்ளவாகவும் எடுத்துக் கொள்ளப்பட்டன.

உபநிஷத்துகளின் ஒரு முக்கியமான விஷேசமென்னவென்றால், அவை, வெவ்வேறு சமயங்களில் உபதேசிக்கப்பட்டிருப்பினும் வெவ்வேறு ரிஷிகளின் அனுபவங்களையும் குறித்த போதிலும், ஒரே உண்மையையும், ஒரே மாதிரியான அனுபவ விசேஷங்களையும் உருவாக்குகின்றன.

ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களுக்கும் வெவ்வேறு உபநிஷத்துக்கள் உள்ளன. கைவல்ய உபநிஷத்து அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. குரு சிஷ்யருக்கு உபதேசம் செய்யும் முறையில் இது அமைந்துள்ளது. விவேகம், வைராக்யம், ஷட்ஸம்பத்தி, முமுக்ஷுத்வம் என்ற நாலு விதமான சாதனைகளையும் அடைந்து உள்ளத் தூய்மை பெற்றவருமான, ருக்வேத ஆசார்யருமான ஆச்வலாயினர் சிஷ்யராக வந்து பிரம்மாவை அணுகி பிரம்ம வித்தையைக் கற்றுக் கொடுக்கும்படி கேட்க, ஆதி குருவாகிய பிரம்ம தேவரும் (பரமேஷ்டியும்), கைவல்யமாகிய நித்தியானந்தத்தை அடையும் மார்க்கத்தை உபதேசம் செய்கிறார். இது தான் கைவல்யோபநிஷத்து.

பிரம்ம வித்தையை வாக்கினால் மட்டும் உபதேசம் செய்வது சாத்தியமானதல்ல என்று நன்கு அறிந்த பிரம்ம தேவர் தன்னுடைய ஸாக்ஷாத்கார அனுபவத்தை மனதில் வைத்துக் கொண்டு, சிஷ்யனுக்கு சிரத்தை, பக்தி,தியான யோகத்தாலும் ஸந்நியாஸ யோகத்தாலும், அதே மாதிரி அனுபவம் உண்டாகி ஞானம் கிடைக்கும் என்று உபதேசிக்கிறார்.



பிரம்மஞானம் அடைதற்கு வெளியே எங்கும் தேட வேண்டிய அவசியம் இல்லை. ஞானம் என்பது "உள்ளுணர்வாகிய நேர்முக அனுபவம்" ஒவ்வொருவரின் ஹ்ருதய கமலத்தில் இருக்கும் பரமாத்மாவை, இந்த அனுபவத்தால் கண்டு உணரலாம்.

ஆத்மா வியவஹார உலகத்தில் பலவாகவும், உடலினாலும், உலகப் பொருள்களாலும் வரையறைப் பட்டதாகவும் தோன்றுகிறது. ஞான மார்க்கத்தில் முன்னேறுவதற்கு முதலில் தகுதி பெற வேண்டும். பலனை எதிர்பாராது கர்மங்களைச் செய்து கொண்டே, இஷ்ட தேவதையிடம் நிலையான இடைவிடாத பக்தியுடன் ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டால், இரண்டற்ற, ஸ்வயம் பிரகாசமுள்ள ஆத்மாவைப் பற்றிய ஞானம் உதயமாகும். இதற்காக உடல் மரணமடையும் வரையில் காத்திருக்க வேண்டியதில்லை. அறிவு வெளிப்பட்டவுடனேயே, உடல் உள்ள நிலையிலும் தூய உணர்வு எய்தி ஜீவன் முக்தராக வாழ இயலும், என்பது தான் கைவல்ய உபநிஷத்தின் உபதேசம். கைவல்ய உபநிஷத்தில் குருவின் உபதேசம் மிகவும் எளிய நடையிலும், கோர்வையாகவும், படிப்படியாக மேலே அழைத்துச் செல்வது போலவும் இருக்கிறதைக் காண்போம்.

27 மந்திரங்களை கொண்ட இந்த உபநிஷத்தின் பொருளடக்கம் பின் வருமாறு —

1-2 வது மந்திரங்களில் சிஷ்யரின் வேண்டுகோள்.

3-5 ல் ஞானம் பெறுவதற்கு எங்ஙனம் தகுதி பெற வேண்டும் என்றுரைத்தல்.

6 ல் (யதிகளின்) ஞானிகளின் விசேஷணங்கள்.

7-12 ல் தியானம் செய்யும் முறையும், பரப்பிரம் மத்தை எந்தெந்த விதங்களில் அறியலாம் என்று கூறப்படு கிறது. ஒரே ஒரு வழி தான் இருக்கின்றதென்றும், வேறு மார்க்கமில்லை என்றும் உரைக்கப்படுகிறது.

13 ல் மேலும் முயற்சி செய்தல்.

14-18 ல் மாயையின் சக்தியால் (விழிப்பு, கனவு, உறக்கம் என்ற) மூன்று நிலைகளிலும் விளையாடுவதால் என்ன நிகழ்கிறது, எங்ஙனம் தனித்து நிற்க முடியும் என்று ஸ்வானுபவத்திலிருந்து குரு எடுத்துரைத்தல்.

19-23 ல் குருவின் மஹாவாக்யம் — உறுதி கூறல்.

24-26 ல் ஆத்மா ஸர்வக்ஞன், ஸர்வ வியாபி, ஸர்வ சக்திமான் என்ற அனுபவம்.

27 ல் கடைசீ படி (பரமாத்மாவை அடை தல்).

28 ல் பலச்ருதி (உபநிஷத்தை தினந்தோறும் அத்யயனம் செய்ய வேண்டுமென்று உணர்த்துதல்)

மேலே கொடுத்துள்ள கிரமமான பொருளடக்கத்தை நோக்குங்கால், கைவல்யோபநிஷத்து, மற்ற உபநிஷத்துக்களை க்காட்டிலும் சிறிதாயினும், பிரம்ம ஞானத்தை அடையும் மார்க்கத்தைச் சுற்ற வளைத்துச் சொல்லாமல், நேராகவும், வேண்டிய அளவுக்குத் தகுதியான சொற்களாலும் உபதேசம் செய்திருப்பதால் இது ஒரு முக்கியமான உபநிஷத்து என்று கருதப்படுகிறது. பிரம்ம சதருத்ரீயம் என்றும் விவரிப்பார்கள் இந்த உபநிஷத்தை.

ஆத்ம விசாரத்தில் ஈடுபட விரும்புவோர்க்கு இந்த உபநிஷத்தை அத்யயனம் செய்வது மிக அவசியம் என்று சொல்லலாம்.



இந்த உபநிஷத்தின் தமிழ் விளக்கம் ஆசார்ய சங்கரானந்தரின் ஸம்ஸ்கிருத தீபிகையைத் தொடர்ந்து செய்யப் பட்டுள்ளது.

இந்த உபநிஷத்தின் மொழிபெயர்ப்பை செய்யும் வேலையை எடுத்துக் கொண்ட பொழுது, எனக்கு உற்சாகமளித்து ஆசீர்வாதித்த, பல வேதாந்த கிரந்தங்களை தமிழில் வெளியிட்டிருக்கும் பிரபல எழுத்தாளரான, ஸ்ரீராம கிருஷ்ணமடத்து ஸ்ரீ அண்ணா சுப்பிரமணியன் அவர்களுக்கும் அவருடைய நண்பரான நம்ம ஸ்ரீ வழுதூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும், எனது குருவான ஸ்ரீ ஸ்வாமி பரமார்த்தானந்தா அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த மொழிபெயர்ப்பிலோ அல்லது அச்சிலோ பிழைகளேதேனும் இருந்தால் வாசகர்களை தயக்கமில்லாமல் எனக்கு அறிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

உரை ஆசிரியர்

சென்னை,

பிரமாதி வருஷம்

**வி.ஆர். கணேசன்.**

॥ ओं तत्सद्ब्रह्मणे नम: ॥

## ॥ शान्ति पाठ : ॥

ओं भद्रं कर्णेभि : श्रृणुयाम देवा : । भद्रं पश्येमाक्षभिर्यजत्रा : । स्थिरैरङ्गैस्तुवाँसस्तनूभि: । व्यशेम देवहितं यदायु : । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवा : । स्वस्ति न: पूषा विश्ववेदा: स्बस्ति-नस्ताक्ष्र्यो अरिष्टनेमि : । स्वस्ति नो बृहस्तपिर्दधातु ।

ओं शान्ति : शान्ति : शान्ति : ॥

ஓம் பத்ரங் கர்ணேபி : ச்ருணயாம தேவா :। பத்ரம் பச்யேமாக்ஷபிர் யஜத்ரா :। ஸ்திரை ரங்கை ஸ்துஷ்டு வாம் ஸஸ்தனூபி :। வ்யசேம தேவஹிதம் யதாயு :। ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா :। ஸ்வஸ்தி ந :। புஷா விச்வ வேதா :। ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷியோ அரிஷ்ட நேமி :। ஸ்வஸ்தி நோ பிருஹஸ்பதிர்ததாது :। ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :॥

### சாந்தி பாடம்

ஓம் ! தேவர்களே எப்பொழுதும் நல்லதையே நம் காதுகளால் கேட்போம். ஓ ! பூஜிக்கத் தகுந்தவர்களே ! கண்களால் நல்லதைக் காண்போம். நியமிக்கப்பட்ட ஆயுள் முழுவதும் ஸ்திரமான உடல்களுடனும், அங்கங்களுடனும் தேவர்களைத் துதித்துக் கொண்டு வாழ்வோம். பெரும் புகழ் வாய்ந்த இந்திரன் நமக்கு நன்மையை அளிக்கட்டும். எல்லாம் அறியும் சூரியனும் நன்மை அளிக்கட்டும். எல்லா அபாயங்களினின்றும் காக்கக்கூடிய தடைபடாத கதியை உடைய கருட



பகவானும் நமக்கு நன்மை அளிக்கட்டும். (ஞானசம்பத்தைக் கொடுக்கும்) பிருஹஸ்பதி நன்மை அளிக்கட்டும்.

மூவிதத்திலும் சாந்தியுண்டாகட்டும் !

இறை, இயற்கை, இயல்பு இவைகளால் ஒரு தடையும் ஏற்படாமல் அமைதி நிலவட்டும். உபநிஷத்தைக் கற்றுக் கொள்ளும் முறையில், இம்மாதிரியான சாந்திபாடம் மிக முக்கியமான அம்சமாகும். குருவும் சிஷ்யர்களும் ஒன்று கூடி இந்த சாந்தி பாடத்தை சொல்லுவது தான் முறை.

மனிதன் கெடுவதும், வாழ்வதும், நன்மையடைவதும் ஐம்புலன்களாலும், சரீரத்தாலும், மனதினுலும், புத்தி, அகந்தையாலும் உண்டாகிறது. ஆகையால் நம் ஜன்மம் கடைதேறுவதற்காக உபநிஷக் கல்வியை தினந்தோறும் ஆரம்பிப்பதற்கு முன் மேன்மை பொருந்திய எல்லா தேவதைகளையும் வணங்கி வேண்டுவது வழக்கமாயிருந்தது. இதன் மூலமாக குருவும் சிஷ்யனும் எல்லாம் வல்ல இறைவனைப் போற்றி, அவனருள் பெற வாழ்த்தி நல்லெண்ணங்களுடனும், மன அமைதியுடனும் பாடம் ஆரம்பிப்பது சிறந்த முறையாக விருந்து வந்தது.

மூவிதத்திலும் சாந்தியுண்டாகட்டும் என்று வேண்டுவது, மூன்று விதமான இடங்களிலிருந்து இடையூறுகள் வராமலிருக்கும் படி காப்பாற்ற வேண்டும் என்று பிரார்த்தனை செய்வதாகும். அதாவது, நமக்கு காணக்கூடிய இடங்களிலிருந்தும், கண்களுக்கெட்டாத

இடங்களிலிருந்தும், நம்முள்ளிருந்தே உண்டாகும் எதிர்ப்புகளிலிருந்தும் காப்பாற்றப்பட வேண்டுமென்றுதான்.

ருக், யஜுர், ஸாம, அதர்வண வேதங்களைச் சார்ந்த உபநிஷத்துக்களுக்கு, தனித்தனி சாந்தி பாடம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. உபயோகத்திலுள்ள மற்ற சாந்தி பாட மந்திரங்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

१.शं नो मित्रः शं वरुणः । शं नो भवत्वर्यमा । शं न इन्द्रो बृहस्पतिः शंनो विष्णु - रुरुक्रमः । नमो ब्रह्मणे । नमस्ते वायो । त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि । त्वमेव प्रत्यक्षं ब्रह्मवदिष्यामि । ऋतं वदिष्यामि । सत्य वदिष्यामि । तन्मामबतु । तद्वक्तारभवतु । अवतुमाम् । अवतु वक्तारम् । ओं शान्तिः शान्तिः ॥

२.सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

३.आप्यायन्तु ममांगानि । वाक् प्राणश्चक्षुः श्रोत्रं अथो बल-मिन्द्रियाणि च सर्वाणि । सर्व ब्रह्मोपनिषदम् । माहं ब्रह्म निराकुर्याम् । मा मा ब्रह्म निराकरोत् । अनिराकरणमस्तु अनिराकरणं मे अस्तु । तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

४.वाङ् मे मनसि प्रतिष्ठिता । मनो मे वाचि प्रतिष्ठितम् । आविरावी-र्म-एधि । वेदस्य म आणीस्थः । श्रुतं मे मा प्रहासीः । अनेनाधीतेनाहोरात्रान् सन्दधामि । ऋतं वदिष्यामि



सत्यं वदिष्यामि । तन्मामवतु । तद्वक्तारमक्तु । अवतु माम् । अवतु वक्तारमवतु वक्तारम् ॥ ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

५. ॐ पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्ण - मुदच्यते । पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

1. சந் நோ மித்ர: சம் வருண: ஞ சந் நோ பவத் வர்யமா । சந் ந இந்த்ரோ ப்ருஹஸ்பதி: । சந் ந இந்த்ரோ ப்ருஹஸ்பதி: । சந் நோ விஷ்ணு ருருக்ரம: । நமோ ப்ரஹ்மணே । நமஸ்தேவாயோ । த்வமேவ பரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி । த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி । ருதம் வதிஷ்யாமி ஸத்யம் வதிஷ்யாமி । தன்மாமவது । தத்வக்தாரமது । அவது மாம் । அவது வக்தாரம் । ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।

2. ஸஹ நாவவது । ஸஹ நௌ புனக்து । ஸஹ வீர்யம் கரவாவஹை । தேஜஸ் விநாவதீத மஸ்து । மா வித்விஷாவஹை । ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।

3. ஆப்யாயந்து மமாங்கானி । வாக் ப்ராணச்சக்ஷு: ச்ரோத்ர மதோ பல மிந்திரியாணி ச ஸர்வாணி । ஸர்வம் ப்ரஹ்மோப நிஷதம் । மாஹம் ப்ரஹ்ம நிராகுர்யாம் । மா மா ப்ரஹ்ம நிராகரோத் । அநிராகாண மஸ்து அநிராகரணம் மே அஸ்து । ததாத்மனி நிரதே ய உபநிஷத்ஸு தர்மாஸ்தே மயிஸந்துதே ம ஸந்து । ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।

4. வாங் மே மனஸி ப்ரதிஷ்டிதா । மனோ மே வாசி ப்ரதிஷ்டிதம் । ஆவிராவிர் ம ஏதி । வேதஸ்ய ம ஆணீஸ்த: । அநேநாதீதேன ஹோராத்ரான் ஸந்ததாமி । ருதம் வதிஷ் யாமி । ஸத்யம்

வதிஷ்யாமி | தன்மாமவது தத்வக் தாரமவது | அவது மாம் | அவது வக்தார மவது வக்தாரம் | ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: |

5. ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் – பூர்ணாத்-பூர்ண முதச்யதே | பூர்ணஸ்ய பூர்ணமாதாய | பூர்ணமே வாவ சிஷ்யதே | ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: |

ஸ்ரீ

## ॥ अथ कैवल्योपनिषत् ॥

ओं नम: । अथाश्वलायनो भगवन्तं परमेष्टिनं
उपसमेत्योवाच ॥ १ ॥

ஓம் நம : | அதாச்வலாயனோ பகவந்தம்
பரமேஷ்டினம் உபஸமேத்யோவாச || 1 ||

(அத) = பிறகு; (ஆச்வலாயனர்) = ருக் வேதாசார்யரான ஆச்வலாயனர்; (பகவந்தம்) = பூஜிக்கத் தகுந்த; (பரமேஷ்டினம்) = பகவான் பிரம்மாவை; (உபஸமேத்ய) = சாஸ்திர பிரகாரம் அணுகி (உவாச) = சொல்கிறார். (கேட்கிறார்)

பிறகு, ருக்வேதாசார்யரான ஆச்வலாயினர் பூஜிக்கத் தகுந்த பிரம்மாவை அணுகி கேட்கிறார்.

(அத) என்று ஆரம்பிப்பதற்கு காரணம், ஆச்வலாயினர் நான்கு வித சாதனைகளையும் அடைந்து, பிரம்ம தேவனை அணுகுகிறார், என்று காட்டுவதற்காக பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. எப்படி விஞ்ஞான சாஸ்திரம் போன்ற லௌகிக



சாஸ்திரங்களை படிப்பதற்கு, முன்படிப்பு பயின்று தகுந்த யோக்யதைப் பெற வேண்டுமோ அவ்வாறே, விதிப்படி விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்வம் என்ற நான்கு விதமான சாதனைகளையும் பெற்று, அந்தக் காரண சுத்தி (உள்ளத் தூய்மை) உண்டான பிறகே உபநிஷத்தைத் தெரிந்து கொள்ள தகுதியுண்டாகும் என்று அர்த்தம்.

ஆச்வலாயினர் : ருக் வேதத்தில் ஒரே ஒரு சாகை தான் பழக்கத்தில் வழங்கி வருகிறது. அது தான் ஐதரேய சாகை. (இதைச் சேர்ந்தது ஐதரேய உபநிஷத்து.) இந்த ஐதரேய சாகையை இயற்றியவர் தான் ஆச்வலாயனர். அப்பேர்ப்பட்ட ஞானியான ஆச்வலாயனரே, மேலும் ஆத்ம ஞானத்தின் உண்மைகளை அறிந்து கொள்ளவும், அதனால் உண்டாகும் அனுபவங்களை உறுதிப் படுத்திக் கொள்ளவும் ஆதி குருவாகிய பிரம்மாவை (பிரமேஷ்டியை) அணுகிக் கேட்கிறார்.

अधीहि भगवन् ब्रह्मविद्यां वरिष्टां
सदा सद्भि: सेव्यमानां निगूढाम् ।
ययाऽचिरात् सर्वपापं व्यपोह्य
परात्परं पुरुष याति विद्वान् ॥ २ ॥

அதீஹி பகவன் பிரஹ்மவித்யாம் வரிஷ்டாம்
ஸதா ஸத்பி: ஸேவ்யமானும் நிகூடாம் |
யயாऽசிராத் ஸர்வ பாபம் வ்யபோஹ்ய
பராத்பரம் புருஷம் யாதி வித்வான் || 2 ||

(அதீஹி) = என்னை அருளிக்கற்றுக் கொடுப்பீர்
(பகவன்) = எல்லா தர்மங்களையும் அறிந்தவரும் ஈச்வரருமான பகவானே !

(ப்ரஹ்மவித்யாம்) = தேச காலப்பொருள்களுக்கப்பால் உள்ள பரம்பொருளை அடைய ஹேதுவாயுமுள்ள பிரம்ம ஞானத்தை

(வரிஷ்டாம்) = மிகவும் சிரேஷ்டமான

(ஸதா) = எப்பொழுதும்

(ஸத்பி:) = (உடலையும், விருப்பு வெறுப்பற்ற அகந்தையும் கடந்துணர்வு பெற்ற) பெரியோர்களால்

(ஸேவ்யமானும்) = இடைவிடாது சேவிக்கப்பட்ட

(நிகூடாம்) = மிகவும் கடினமான வித்தையாதலால் மனப்பக்குவம் வாய்ந்தவருக்கே (தேர்ந்த பிரம்ம ஞானியின் மூலமாகவே) அறிந்து கொள்ள சாத்தியமான ரகஸ்யத்தை

(யயா) = எதை அறிந்து கொள்வதால்

(அசிராத்) = கால தாமதமின்றி

(ஸர்வபாபம்) = அவித்யா வாசனைகளால் தேகத்திலும் இந்திரியங்களிலும் உள்ள பற்றுக்களை

(வ்யபோஹ்ய) = களைந்து

(பராத்பரம்) = எல்லாவற்றிற்கும் மேலான மாயையைக்கடந்த

(புருஷம்) = பரிபூர்ண புருஷனை (பரப்பிரம்மத்தை)

(யாதி) = அடைகிறானோ

(வித்வான்) = பிரம்ம ஸாக்ஷாத்காரம் பெற்ற ஞானியானவன்



2. பகவனே, மிக சிரேஷ்டமான பிரம்ம வித்தையை எனக்குக் கற்றுக் கொடுங்கள். எந்த வித்தையானது உடலையும், விருப்பு வெறுப்பற்ற அகந்தையும் கடந்துணர்வு பெற்ற பெரியோர்களால் இடைவிடாது கடைபிடிக்கப்பட்டதோ, எது மிகவும் ரகஸியமானதோ, எதை அறிவதால் ஞானி எல்லா அவித்யா வாசனைகளாலாகிய பாவங்களையும் களைந்து எல்லாவற்றிற்கும் மேலான பரிபூர்ண புருஷனை (பரம்பொருளை) அடைகிறானோ (அந்த வித்தையைக் கற்றுக் கொடுங்கள்.)

तस्मै सहोवाच पितामहश्च —
श्रद्धाभक्ति ध्यान योगादैवहि ॥ ३ ॥

தஸ்மை ஸஹோவாச பிதாமஹச்ச —
ச்ரத்தா பக்தி த்யான யோகாதவைஹி | 3 |

(தஸ்மை) = பிரம்ம வித்யார்த்தியாகிய சிஷ்யனுக்கு

(ஸ:) = ஸர்வக்ஞனான அந்த குரு

(ஹோவாச) = சொல்கிறாரன்றோ !

(பிதாமஹச்ச) = பெரிய பாட்டனாரான அந்த பிரம்ம தேவரும்

(ச்ரத்தா) சிரத்தையினாலும்

(பக்தி) பக்தியினாலும்

(த்யானயோகாத்) தியான யோகத்தாலும

(அவைஹி) அறிந்து கொள்வாய்

3. தக்ஷன் முதலிய ஜகத் பிதிருக்களுக்கெல்லாம் தகப்பனுன, பெரிய பாட்டனுரான பிரம்ம தேவர் சிஷ்யனிடம் சொல்கிருர் :— "சிரத்தையாலும், பக்தியாலும், தியான யோகத்தாலும், அறிந்து கொள்வாய்" என்று.

பிரம்ம வித்தையை வாக்கினுல் மட்டும் உபதேசம் செய்வது, சாத்தியமானதல்ல என்று நன்கு அறிந்து பிரம்ம தேவர், தன்னுடைய ஸாக்ஷாத்கார அனுபவத்தையே மனதில் வைத்துக் கொண்டு சிஷ்யனுக்கு சிரத்தை, பக்தி, தியான யோக நிஷ்டையினுல் அதே மாதிரி ஞானம் உண்டாகி அனுபவமும் உண்டாகும் என்று இந்த உபாயத்தைச் சொல்கிருர்.

பகவத் கீதையில் (IV-34) பகவான் சொன்னபடி "பிரம்ம ஞானம் அடைய விரும்புவோர் மிகப்பணிவுடனும், சூழ்ந்த கேள்விகளாலும், தொண்டு புரிவதாலும் வேண்டிக் கொண்டால், ஞானியாகிய குரு கட்டாயம் உபதேசம் செய்வார். அது அவருடைய கடமை ஆகும் என்று, இந்த பகவத் வசனத்தை எடுத்துக் காட்டுவது போல் பிரம்ம தேவர் உபதேசம் செய்ய முன் வந்தார் போலும் !

மற்ருெரு இடத்தில் "சிரத்தையுள்ளவன் ஞானம் அடைகிருன்". (கீதை IV-39) என்று பகவான் சொல்கிருர். அதே போல் பிரம்மதேவரும் ச்ரத்தையை வற்புறுத்திச் சொல்கிருர். ச்ரத்தை என்பது வேதங்களில் ஆழ்ந்த நம்பிக்கையும், குருவின் வார்த்தைகளில் பூரண கவனமும் கூடியதும் ஆகும்.

(பக்தி) - பரம புருஷனிடத்தில் தங்கள் செயலனத்தையும் அர்ப்பணம் செய்து, மனதையும் முற்றிலும் அவனிடத்தே



செலுத்தி எப்பொழுதும் அவனையே நேசிக்கும் பாவம் பெற்றிருக்கும்படியான நிலைமை பக்தி என்று சொல்லலாம்.

ச்ரவணம் மனனம், நிதித்யாஸனம் என்ற, இம்மூன்று வழிகளால் பிரம்ம ஞானத்தை அடைய முடியும் என்று கூறப்படுகிறது.

न कर्मणा न प्रजया घनेन त्यागेनैके
अमृतत्वमानशु: ॥ ४ ॥

ந கர்மணு ந பிரஜயா தனேன த்யாகேனைகே
அமிருதத்வமான சுः । 4 ।

| | |
|---|---|
| (ந கர்மணு) | = கர்மங்களாலன்று |
| (ந பிரஜயா) | = புத்ரர்களாலுமன்று |
| (ந) (தனேன) | = செல்வத்தாலும் அன்று |
| (ஏகே) | = மஹான்கள் |
| (அமிருதத்வம்) | = என்றும் அழிவற்ற நிலைமையை |
| (ஆனசுः) | = அடைந்தார்கள் |

4. மகான்கள் என்றும் அழிவற்ற நிலையை தியாகத்தினுல் தான் அடைந்தார்கள். கர்மங்களால் மட்டும் அன்று, புத்திரர்களாலும் அன்று, செல்வத்தாலும் அன்று.

(கர்மணு) : ஸ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் சொல்லியிருக்கிற கர்மங்களால் மட்டும் பிரம்மத்தை அடைய முடியாது.

அந்தந்த கர்மங்களை விதிப்படி செய்து வந்தால் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறபடி, பிதிரு லோகமோ, ஸ்வர்க்க லோகமே, பிரம்ம லோகமோ என்ற பலன்கள் தான் கிடைக்கும்.

(தியாகேன) எல்லா வித கர்மங்களையும் (கர்ம பலன்களையும்) துறந்து (ஈச்வரார்ப்பணம் செய்து) பரமஹம்ஸ ஆச்ரம ரூபத்தினால் தான் சாத்யமானது.

(அமிருதத்வம்) வ்யாவஹாரிக உலகத்தில் சரீரம், மனது, புத்தி இவைகளால் ஈடுபட்டிருக்கும் நிலையிலிருந்து கடந்து ஆத்ம ஞானத்தில் விழித்தெழுந்தால், அந்த நிலை தான் அழிவற்ற நிலை என்று கூறப்படுகிறது. ஜீவன் முக்தராக வாழுதல் ஒரு உதாரணம்.

परेण नाकं निहितं गुहायां विभ्राजते
यद्यतथो विशन्ति ॥ ५ ॥

பரேண நாகம் நிஹிதம் குஹாயாம்
விப்ராஜதே யத்யதயோ விசந்தி ॥ 5 ॥

(பரேண நாகம்) = இன்ப துன்பங்களுக்கப்பால் உள்ளதும், ஸ்வர்க்கத்திலும் மேலான

(நிஹிதம் குஹாயாம்) = ஹ்ருதய கமலமாகிய குகையில் நிலை பெற்று

(விப்ராஜதே) = பிரகாசிக்கிறதோ

(யத்) = எது

(யதயோ) = பிரம்ம ஸாக்ஷாத்காரமடைந்த ஞானிகள்

(விசந்தி) = (அதை) நுழைகிறார்கள்



இன்ப துன்பங்களுக்கப்பால் உள்ளதும் ஸ்வர்க்கத்தினும் மேலானதும் ஆன, ஹ்ருதய கமலத்தில் நிலை பெற்று எந்த ஆத்மா பிரகாசிகச்கின்றதோ, அதை ஞானிகள் அடைகின்றார்கள். (அறிகிறார்கள்.)

"பரம் பொருள் தன்னை விட்டு வெளியே எங்கும் வேறாக இல்லை. தன்னுள்ளேயே ஹ்ருதய கமலத்தில் குடி கொண்டு பிரகாசிப்பதை ஞானிகள் அறிவார்கள். உதாரணமாக, எங்களைப் போன்ற அந்த தூய உணர்வு பெற்ற ஞானிகள் பல பேர் உள்ளனர். அதே போல் ஸாக்ஷாத்கார அனுபவம் உனக்கும் உண்டாகும்" என்று குரு எடுத்துரைப்பது போல் தோன்றுகிறது.

(நான்காவது, ஐந்தாவது, ஆறாவது மந்திரங்கள் கடோபநிஷத்திலும், முண்டகோபநிஷத்திலும், ஏறக்குறைய இதே சொற்களில் கூறப்பட்டிருக்கின்றன.

वेदान्तविज्ञान सुनिश्चितार्थाः ।
सन्यासयोगाद्यतयः शुद्धसत्वाः ।
ते ब्रह्मलोकेषु परान्तकाले
परामृतात्परि मुच्यन्ति सर्वे ॥ ६ ॥

வேதாந்த விக்ஞான ஸுநிச்சிதார்த்தா :
ஸந்யாஸ யோகாத்யதய: சுத்த ஸத்வா: ।
தே பிரம்ம லோகேஷு பராந்தகாலே
பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே ॥ 6 ॥

(வேதாந்த விஞான ஸுநிச்சிதார்த்தா:) = வேதாந்த தத்வத்தை நன்றாக அறிந்து அந்த ஞானத்துடன் திட நிச்சய நிலை பெற்றவர்களான

(ஸந்யாஸ யோகாத்) = புலன்களாலாய போகங்களைத் துறந்து ஸந்நியாஸ யோகத்தில் வாழும்

(யதய;) = தன்னை வென்ற ரிஷிகள்

(சுத்த ஸத்வா:) = பரிசுத்தமான சித்தம் உடையவர்களான

(தே ஸர்வே) = அவர்களனைவரும்

(பராம்ருதாத் பிரம்ம லோகேஷு) = மறுபிறப்பு அற்ற நிலையாகிய' பிரம்மத்தில் நிலை பெற்று

(பராந்த காலே) = கடைசீ காலத்தில் உடல் விழ்ந்த பின்னர் அல்லது உடல் பற்று முற்றிலும் தவிர்த்த பின்னர்

(பரிமுச்யந்தி) = மாயையிலிருந்து அறவே விடுபெற்றவராய் ஜீவன் முக்தராய் மறுபிறப்பின்றி பிரம்மத்தோடு கலந்து விடுகின்றனர்.

6. புலன்களாலாய போகங்களைத் துறந்து ஸந்நியாஸ யோகத்தில் வாழும், தன்னை வென்ற ரிஷிகள், பரிசுத்தமான சித்தம் உடையவராய், வேதாந்த தத்வத்தை நன்கு அறிந்து திடநிச்சய நிலை பெற்றவராய் ஜீவன் முக்தராய் கடைசிகாலத்தில் உடல் விழ்ந்த பின்னர் விதேஹ முக்தி அடைகின்றனர்.

विविक्त देशे च सुखासनस्थ:
शुचि: समग्रीव शिर: शरीर: ।



अत्याश्रमस्थ: सकलेन्द्रियाणि
निरुध्य भक्तया स्वगुरुं प्रणम्य ॥ ७ ॥

விவிக்த தேசே ச ஸுகாஸநஸ்த:
சுசி: ஸமக்ரீவ சிர: சரீர: ।
அத்யாச்ரமஸ்த: ஸகலேந்த்ரியாணி
நிருத்ய பக்த்யா ஸ்வகுரும் ப்ரணம்ய ॥ 7 ॥

(விவிக்த தேசே) = தனிமையான இடத்தில்

(ஸுகாஸ நஸ்த:) = சௌகர்யமான (தனக்கு பிடித்த) ஆஸனத்தில் அமர்ந்து

(சுசி:) = உள்ளும் புறமும் தூய்மையுடன்

(ஸமக்ரீவ சிர: சரீர:) = கழுத்தையும், தலையையும், உடம்பையும் ஸமமாக (அசைவின்றி) வைத்துக் கொண்டு

(அத்யாச்ரமஸ்த:) = பிரம்மசர்ய, க்ருஹஸ்த, வானப் பிரஸ்த ஆச்ரமங்களைக் கடந்தவயனும், உலகவியவ ஹாரங்களில் கர்ம பலன்களைத் துறந்தவனாய் (பரம் ஹம்ஸ லக்ஷணனாய்)

(ஸகலேந்த்ரியாணி நிருத்ய) = எல்லா புலச் செயல்களையும் உள்ளத்தையும் கட்டுப்படுத்தியவனாய்

(பக்த்யா) = பக்தியுடன்

(ஸ்வகுரும் ப்ரணம்ய) = தன் குரு தேவரை நமஸ்கரித்து (தியானத்தில் அமர வேண்டும்)

7. தனிமையான இடத்தில் சௌகர்யமான தனக்கோருதியான ஆஸனத்தில் அமர்ந்து, உள்ளும் புறமும் தூய்மையுடன், கழுத்தையும், தலையையும், உடலையும் ஸமமாக அசைவின்றி வைத்துக் கொண்டு பிரம்மசர்ய, கிருஹஸ்த, வானப்ரஸ்த ஆச்ரமங்களைக் கடந்தவனாய் (பரம ஹம்ஸ லக்ஷணனாய்) உலக வியவகாரங்களில் கர்ம பலன்களைத் துறந்தவனாய், எல்லா புலச் செய்கைகளையும், உள்ளத்தையும் கட்டுப்படுத்தி பக்தியுடன் தன் குரு தேவரை நமஸ்கரித்து (தியானத்தில் அமர வேண்டும்)

எவ்வாறு தியானம் செய்வது என்று பின்வரும் மூன்று மந்திரங்களில் சொல்லப்படுகிறது —

हत्पुण्डरीकं विरजं विशुद्धं
विचिन्त्य मध्ये विशदं बिशोकम् ।
अचिन्त्यमव्यक्तमनन्तरूपं
शिवं प्रशान्तममृतं व्रह्मयोनिम् ॥
तमादिमध्यान्त विहीन मेकं
विभुं चिदानन्दमरूपमद्भुतम् ॥ ८ ॥

ஹ்ருத் புண்டரீகம் விரஜம் விசுத்தம்
விசிந்த்ய மத்யே விசதம் விசோகம் ।
அசிந்தய மவ்யக்த மனந்த ரூபம்
சிவம் பிரசாந்தமம்ருதம் ப்ரஹ்மயோனிம்
தமாதி மத்யாந்த விஹீனமேகம்
விபும் சிதானந்த மரூபமத்புதம் ॥ 8 ॥



| | |
|---|---|
| (க்ஷ்ருத் புண்டரீகம்) | = ஹ்ருதய கமலத்தை (ஆத்மாவை) |
| (விரஜம்) | = ராகத்வேஷமில்லாததும் |
| (விசுத்தம்) | = தமோகுணமற்றதும (துக்காதி தோஷங்களற்றதும்) |
| (விசதம்) | = நிர்மலமானதும் (ஸ்வயம் பிரகாசத்தினுல்) |
| (விசோகம்) | = பிரம்மானந்த ஸ்வரூபமானால் சோகமில்லாததும். |
| (விசிந்த்ய) | = தியானித்து |
| (மத்யே) | = ஹ்ருதயத்தினுள்ளேயே |
| (அசிந்த்யம்) | = எண்ணுதற்கரியதும் (சிந்தனைக் கரியான்) |
| (அவ்யக்தம்) | = புலன்களுக்கப்பாற்பட்டதும் (தெளிதர்கரியான்) |
| (அனந்த ரூபம்) | = தேச கால பொருள்களைக் கடந்ததும் (விச்வ ப்ரபஞ்ச ரூபமாயுமள்ளதும்) |
| (சிவம்) | = மங்கள ரூபமானதும் |
| (பிரசாந்தம்) | = அவித்யா தோஷமற்று நித்ய சாந்தனும் |
| (அம்ருதம்) | = அழிவற்றதும் |
| (ப்ரஹ்மயோனிம்) | = ஸர்வ ஜகத் ஜன்மத்திற்கு காரணமானதும் |

| | | |
|---|---|---|
| (ஆதிமத்யாந்த விஹீனம்) | = | ஆதியும், நடுவும், அந்தமு மில்லாமல் காலவரம்பற்றதும் |
| (ஏகம்) | = | இரண்டேயற்று ஒன்றுய் இருப்பதும் |
| (தம்) | = | அந்த (ஆத்மாவை) |
| (விபும்) | = | எங்கும் நிறைந்தவனும் |
| (சிதானந்தம்) | = | பரமானந்த ஸ்வரூபமானவனும் |
| (அருபம்) | = | ரூபமில்லாதவனும் |
| (அத்புதம்) | = | ஆச்சர்யகரமானவனும் (ஆக தியானம் செய்ய வேண்டும்) |

8. ஹ்ருதய கமலமான ஆத்மாவை தன் ஹ்ருதயத்தி னுள்ளேயே, ராகத்வேஷமற்றவன், தமோகுணமற்றவன், ஸ்வயம் பிரகாசிப்பதால் நிர்மலமானவன், பரமானந்த ஸ்வரூபத்தால் சோகமில்லாதவன், எண்ணுதற்கரியான், புலன் களுக்கப்பாற்பட்டவன், விச்வ பிரபஞ்ச ரூபமாயுள்ளவன், மங்கள சிவரூபமாயுள்ளவன், புலச்செயல்களில் ஈடுபடாது அவித்யாதோஷமற்று நித்ய சாந்தன், அழிவற்றவன், ஸர்வ ஜகத் ஜன்மத்திற்கு காரணமானவன், ஆதியும், நடுவும், அந்தமு மில்லாமல் தேச காலவரம்பற்றவன், இரண்டற்றவன், எங்கும் நிறைந்தவன், ஆச்சர்யகரமானவன் (என்று தியானம் செய்ய வேண்டும்)

மேலே சொல்லியுள்ளவையெல்லாம், பரம் பொருளின் நிர்குண நிராகார (ரூபமில்லாத) தியானத்துக்கான அம்சங்களேயாகும். இம்மாதிரி தியானிப்பது மிகவும் கடினம். நன்றுக மனப்பக்குவம் அடைந்தவருக்கே இது சாத்யமாகும்.



அவ்வாறு நிர்க்குண தியானத்தில் ஈடுபட முடியா விட்டால், கீழே சொல்லப்போகிற மந்திரத்தால், ரூபத்தோடு கூடிய ஸகுண உபாஸனையை கடைபிடிக்கலாம், முதல் படியாக.

उमासहायं परमेश्वरं प्रभुं
त्रिलोचनं नीलकण्ठं प्रशान्तम् ।
ध्यात्वा मुनिर्गच्छति भूतयोनिं
समस्त साक्षिं तमस: परस्तात् ॥ ९ ॥

உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும்
த்ரிலோசனம் நீலகண்டம் பிரசாந்தம் ।
த்யாத்வா முனிர்கச்சதி பூத யோனிம்
ஸமஸ்த ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் ॥ 9 ॥

| | | |
|---|---|---|
| (உமாஸஹாயம்) | = | அர்த்நாரீச்வரஸ்வரூபியான |
| (பரமேச்வரம் பிரபும்) | = | எல்லாம் வல்ல பரமேச்வரனை |
| (திரிலோசனம்) | = | முக்கண்ணனுனவனும் (சந்திரன், சூரியன், அக்னி என்ற மூன்று கண்களையுடையவனுன) |
| (நீலகண்டம்) | = | நீல கழுத்துடையோனும் |
| (பிரசாந்தம்) | = | பிரசன்னவதனேந்திரியங்களுள்ள வனுனதால் நித்ய சாந்தனுமான |
| (த்யாத்வா) | = | தியானம் செய்து |
| (முனி:) | = | ஸாதகனுன ஞானியானவன் |
| (கச்சதி) | = | அடைகிருன் |

(பூதயோனிம்) = எல்லா உயிர்களுக்கும் காரணமான

(ஸமஸ்த ஸாக்ஷிம்) = எல்லா நிலைகளிலும் நிகழும் வியவஹாரங்களுக்கும் ஸாக்ஷியான

(தமஸ: பரஸ்தாத்) = அறியாமை என்ற இருளுக்கப்பால் உள்ளவனுமான

9. எல்லாம் வல்லனும், முக்கண்ணனும், நீல கழுத்துடையோனும் பிரஸன்ன வதனேந்திரியனுமான அர்த்தநாரீச்வரரூபியான பரமேச்வரனை தியானித்து, எல்லா உயிர்களுக்கும் காரணமான தும், எல்லா நிலைகளிலும் நிகழும் வியவஹாரங்களுக்கப்பால் உள்ளதுமான அந்த பரப்பிரம மத்தையே அடைகிறான்.

(உமா ஸஹாயம்): உமா தேவி (சக்தி) பிரகிருதியாகவும் ஈச்வரன் புருஷனாகவும் ஒன்று சேர்ந்தால் தான் உலகப் பொருள்கள் உயிர் பெற்று இயலும். சக்தியும் ஈச்வரனும் கூடிய ரூபம் அர்த்த நாரீச்வர ஸ்வரூபம்.

கேன உபநிஷத்தில் இந்திரனுக்கு உமா ஹைமவதி ஞானத்தை அருளினாள் என்ற கதை வருகிறது.

(த்ரிலோசனம்) : சிவ புராணத்தில் பரமசிவனை முக்கண்ணனாக வர்ணித்திருக்கிறது. சிவ தாண்டவம் ஆடும் பொழுது பரமேச்வரன் மூன்றாவது கண்ணைத் திறந்தால் நாமமும், ரூபமும் பெற்ற உலகமே எரித்து விடும். அதாவது, தியான யோகத்தால் ஞானம் அடைந்தவன், இரண்டற்ற ஒரே பிரம்மத்தை அறியும் பொழுது, நாமமற்ற, ரூபமற்ற, ஸர்வவ்யாபியான ஈச்வரனை அறிகிறான் என்று பொருள் கொள்க.



(நீலகண்டம்) : பாகவதத்தில் வரும் கதையில், பாற்கடலை கடையும் பொழுது தேவர்களாலும், அசுரர்களாலும் அங்கும் இங்கும் இழுக்கப்பட்டு களைப்படைந்த வாஸுகி என்றும் பாம்பு தன் விஷத்தைக் கக்குவதாயும் அதைக் கண்ட அசுரர்கள் பயந்து பரமசிவனை வேண்டிக் கொள்ள அவர் அந்த விஷத்தை உட்கொண்டாரென்றும், உமா தேவியானவள் இதைப் பார்த்து அந்த விஷம் தன் பர்த்தாவின் வயிற்றுக்குள் போகாமல் தடுக்க கழுத்தைக் கெட்டியாக அழுத்திப் பிடித்துக் கொண்டாளென்றும், இதனால் விஷமெல்லாம் கழுத்திலேயே தங்கிவிட பரமேச்வரனின் கழுத்து நீல நிறமடைந்ததாகவும், இதன் காரணமாக பாற்கடலிலிருந்து அமிருதம் விஷம் கலக்காமல் எடுக்கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது.

உண்மையில் இந்த கதை ஒரு பெரிய கருத்தை எடுத்துக் கூறுகிறது. பரிசுத்தம் அடைந்த மனம் தான் பாற்கடல். கடையும் கயிறான பாம்பு தான் அஹங்காரம். இரண்டு எதிர் உணர்ச்சிகள் எதிர்த்துப் போராடும் மனோ நிலையில் முதலில் அறியாமையாலாய வாஸனைகள் வெளியே வருகின்றன. இவ்வாஸனைகளை முற்றிலும் வெளியேற்றினால் தான் இறவாமை என்னும் அமிருதம் (ஞானம்) கிடைக்கப் பெறும்.

(ஸமஸ்தாஸாக்ஷிம்) உள்ளேயிருக்கும் ஆத்மா, முக்குணங்களால் உண்டாகும் வியவஹாரங்களில் ஈடு படாமல் தனியே அவற்றை மேற்பார்ப்போன் போல, உடலிலும், உள்ளத்திலும் நிகழ்வனவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். உடலிலும் புயச்செயல்களிலும் ஈடுபட்டால் பிறப்பு, வளர்ப்பு, மாறுதல் அழிவு என்றவைக்குள்ளாக நேரிடும். இதற்கெல்லாம் அப்பால் இருப்பதால் ஆத்மாவை ஸாக்ஷி போல் இருக்கிறதென்று சொல்லப்படுகிறது.

स ब्रह्मा स शिव: सेन्द्रष सोऽक्षर: परम: स्वराट् ।
स एव विष्णु: स प्राण: स कालोऽग्नि: स चन्द्रमा: ॥ १० ॥

ஸ பிரஹ்மா ஸ சிவபு ஸேந்திர:
ஸோக்ஷர: பரம: ஸவராட் ।
ஸ ஏவ விஷ்ணு: ஸப்ராண:
ஸ காலோக்னி: ஸ சந்த்ரமா: ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| (ஸ பிரஹ்மா) | = | அவனே பிரம்மா |
| (ஸ சிவ :) | = | அவனே சிவன் |
| (ஸ இந்த்ரா :) | = | அவனே இந்திரன் |
| (ஸ அக்ஷரா :) | = | அவனே அழிவற்றவன் |
| (ஸ பரம :) | = | அவனே எல்லாம் வல்லவன் |
| (ஸ்வராட்) | = | ஸ்வயம் பிரகாசிப்பவன் |
| (ஸ ஏவ விஷ்ணு :) | = | அவனே விஷ்ணு |
| (ஸ ப்ராண :) | = | அவனே பிராணன் |
| (ஸ காலோக்னி :) | = | அவனே காலனும் அக்னியும் |
| (ஸ சந்த்ரமா :) | = | அவனே சந்திரன் |

அவனே பிரம்மா, சிவன், இந்திரன், அழிவற்றவன், எல்லாம் வல்லவன், ஸ்வரம் பிரகாசிப்பவன், விஷ்ணு, பிராணன், காலனும் அக்னியும் அவனே, அவனே சந்திரன்.

स एव सर्वं यद्भूतं यच्च भव्यं सनातनम् ।
ज्ञात्वा तं मृत्युमत्येति नान्य: पन्था विमुक्तये ॥ ११ ॥



ஸ ஏவ ஸர்வம் யத்பூதம்
யச்ச பவ்யம் ஸநாதனம் ।
ஞாத்வா தம் மிருத்யுமத்யேதி
நான்ய: பந்தா விமுக்தயே ॥ 11 ॥

| | | |
|---|---|---|
| (ஸ ஏவ ஸர்வம் யத்பூதம் யச்ச பவ்யம்) | = | அவனே, இருந்தனவை இருக்கப் போகின்றனவையெல்லாம் |
| (ஸநாதனம்) | = | என்றும் நிலைத்தவனுமவனே |
| (தம் ஞாத்வா) | = | என்று அவனை அறிந்து |
| (மிருத்யு:மத்யேதி) | = | இறப்பை கடக்கிறுன் (இறவாமை எய்துகிறுன்) |
| (நான்ய: பந்தா) | = | வேறு மார்க்கம் இல்லை |
| (விமுக்தயே) | = | முக்தி பெறுவதற்கு |

11. இருந்தனவை, இருக்கப் போகின்றனவையெல்லாம் அவனே, என்றும் நிலைத்தவனுமவனே ; என்று இங்ஙனம் அறிந்து, (ஞானி) இறவாமை எய்துகிறுன். முக்திக்கு வேறு வழியே இல்லை.

ஒன்பதாவது மந்திரத்தில் ஸகுணேபாஸனையால் உண்டாகும் ஞான அனுபவத்தைப் பற்றிக் கூறினர். இந்த இரண்டு மந்திரங்களிலும், அப்பேர்ப்பட்ட அனுபவத்தால் தன்னுள்ளேயிருக்கும் ஆத்மாவை பிரம்மாவாகவும், விஷ்ணுவாகவும், சிவனுகவும், இந்திரனுகவும், சந்திரனுகவும், என்றும் சாச்வதமானவனுக்வும் என்றெல்லாம் கூறப்படுகிறது.

இவையெல்லாம் ஒரே உண்மையான ஸர்வேச்வரனையே குறிக்கிறதாக எடுத்துக்காட்டுவதற்காகவேயாகும். மேலும்

பரமேஷ்டியான பிரம்மதேவர் குரு என்கிற முறையில் தன்னுடைய ஸ்வானுபவத்தை எடுத்து நிரூபிக்கவும், சிஷ்யனுக்கு பரிபூர்ண நம்பிக்கையும் உத்சாகமும் ஊட்டவும், இறவாமை எய்துவதற்கு இம்மாதிரி தியானத்தைத் தவிர வேறு வழியே இல்லை என்று உறுதியாகக் கூறுகிருர். இது உபநிஷதங்களில் ஒரு விசேஷ அம்சமாகும்.

வேதங்களில் பல இடங்களிலும் இம்மாதிரி உறுதி கூறல் இருப்பதைக் காணலாம். உதாரணமாக "புருஷஸூக்தத்தை" ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.

सर्वभूतस्थमात्मानं सर्व भूतानिचात्मनि ।
सम्पश्यन् ब्रह्म परमं याति नान्येन हेतुना ॥ १२ ॥

ஸர்வ பூதஸ்த மாத்மானம்
ஸர்வ பூதானி சாத்மனி ।
ஸம்பச்யன் பிரஹ்ம பரமம்
யாதி நான்யேன ஹேதுனு ॥ 12 ॥

| | | |
|---|---|---|
| (ஸர்வ பூதஸ்மாத்மானம்) | = | எல்லா உயிர்களிடத்தும் தானிருப்பதையும் |
| (ஸர்வ பூதானிசாத்மனி) | = | தன்னுள் எல்லா உயிர்களிப்பதையும் |
| (ஸம்பச்யன்) | = | காண்பதால் |
| (பரமம் பிரஹ்ம) | = | பரம் பொருளாகிய பரப்பிரம்மத்தை |
| (யாதி) | = | அடைகிருன் |
| (நான்யேன ஹேதுனு) | = | வேறு வழியால் (அடைய முடியாது) |



12. எல்லா உயிர்களிடத்தும் தானிருப்பதையும், தன்னுள் எல்லா உயிர்களிருப்பதையும் காண்பதால், (ஞானி) பரம் பொருளாகிய பரப்பிரம்மத்தை அடைகிருன். வேறு மார்க்கத்தால் அடைய முடியாது.

பகவத் கீதையிலும் பகவான் இதே கருத்தை அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்கிருர் — "யோகத்தில் கலந்தவன் எங்கும் ஸமபார்வை அடைந்தவனுய் எல்லா உயிர்களிடத்தும் தன்னையும், தன்னுள் எல்லா உயிர்கள் இருப்பதாயும் காண்கிருன்" என்று (VI 29)

ஈசாவாஸ்ய உபநிஷத்திலும் இதே கருத்து உரைத்திருப்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம் [ஈசாவாஸ்யம்-6]

"யஸ்து ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபச்யதி ।
ஸர்வ பூதேஷு சாத்மானம் ததோ ந விஜிகுப்ஸதே ॥ "

உதாரணமாக, சமுத்திரத்திலும் நீர் இருக்கிறது. அலையிலும் நீர் இருக்கிறது. அலையை உண்டாக்கியது சமுத்திரமே. எவனெருவன் இந்த உண்மையை அறிகிருனே, அவனுக்கு ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள சம்பந்தம் உடனே புலப்படும். அப்பொழுது அலையினுள்ளிருக்கும் ஜலமும், சமுத்திரத்திலிருக்கும் ஜலமும் ஒன்றே, ஆகையால் ஒரு அலையில் உள்ள ஜலந்தான் எல்லா அலைகளிலும் உள்ளது, என்றும் தெளிவாகிறது. இந்த ஸமபாவம் உண்டானல் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா முதல், மிகச்சிறிய எறும்பு வரை எல்லாவற்றையும் ஸமபார்வையோடு நோக்கும் பான்மை இயல்பாகிறது. அதனுல் எல்லா உயிர்களையும் தன் ஸ்வரூபமாகவும், தன்னை எல்லா உயிர்களின் ஸ்வரூபமாகவும் உணரும் தன்மையும் வந்தமைகிறது.

आत्मानमरणिं कृत्वा प्रणवं चोतरारणिम् ।
ज्ञाननिर्मथनाभ्यासात् पाशं दहति पण्डित: ॥ १३ ॥

ஆத்மானமரணிம் க்ருத்வா
ப்ரணவம் சோத்தராரணிம் ।
ஞான நிர்மதனுப்யாஸாத்
பாசம் தஹதி பண்டித: ॥ 13 ॥

(ஆத்மானம்) = தன்னையே (மனோ புத்தி சித்தம் கலந்த அந்த: கரணத்தை
(அரணிம்) = கீழ்க்கட்டையாகவும்
(பிரணவம்
சோத்தராரணிம் க்ருத்வா) = பிரணவத்தை மேல் கட்டையாகவும் செய்து (கருதி)
(ஞான நிர்மதனுப்யாஸாத்) = ஓங்காரமாகிய பிரணவத்தை தியானம் செய்து அந்த: கரணத்தையும், பிரணவத்தையும் ஒன்று சேர்த்து கடைவது போல் உள்ள அப்பியாஸத்தால் ஞானத்தீ உண்டாக்கி (மரக்கட்டைகளைக் கடைந்து நெருப்பு உண்டாக்குவது போல்)
(பண்டித :) = ஞானி (ஸாதகன்)
(பாசம் தஹதி) = அறியாமையால் உண்டான) பற்றை எரித்து விடுகிறான்

13. அந்த: கரணத்தைக் கீழ் கட்டையாகவும் பிரணவத்தை மேல் கட்டையாகவும் கருதி ஓங்காரமாகிய பிரணவத்தை தியானம் செய்து மனதையும் பிரணவத்தையும் ஒன்று சேர்த்துத் திரும்பத் திரும்ப கடைவது போல் உள்ள முயற்சியினால் ஞானத்தீ உண்டாக்கி (மரக்கட்டைகளைச்



சேர்த்துக் கடைந்து நெருப்பு உண்டாக்குவது போல்) அக்ஞானத்தால் உண்டானவற்றை எரித்து விடுகிறான்.

பண்டைய காலத்தில் யாகத்திற்கு அக்னி உண்டாக்குவதற்கு இரண்டு கட்டைகளை உறைத்துக்கடைந்து தீ உண்டாக்குவது தான் முறை. அவ்வாறே அந்த கரணமும் ஓங்காரமும் தியானத்தால் உறைவது போல் கடையப்பட்டு, ஞானமாகிய அக்னி இந்திரியங்களுடனும், மனது புத்தியுடனும் இணைக்கப்பட்ட அகங்காரத்தினால் உண்டான பற்றுக்களையெல்லாம் முற்றிலும் எரித்து விடுகிறது என்று கருத்து.

ஓங்கார உபாசனையைப் பற்றி மாண்டுக்ய உபநிஷத்திலும் விவரமாக கொடுத்திருப்பதைக் காணலாம்.

இம்மாதிரி உபாஸனையினால், மனதிலுள்ள ஆசை, அச்சம், சினம் என்ற அழுக்குகள் நீங்கி, மயக்கம் தெளிந்து, அகந்தை உடைந்து ஞானம் உண்டாகும். அப்பொழுது தான் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்ற அறிவும் புலப்படுகிறது.

இனிவரும் ஐந்து மந்திரங்களில், அந்த: கரண – பிரணவ இணைப்பினால் ஞானம் எப்படி கடைந்தெடுக்கப்படுகிறது என்று சொல்கிறார் குருதேவர்.

स एव माया परिमोहितात्मा
शरीरमास्थाय करोति सर्वम् ।
स्त्रियन्नपानादि विचित्र भोगैः
स एव जाग्रत्परि तृप्तिमेति ॥ १४ ॥

ஸ ஏவ மாயா பரி மோஹிதாத்மா
சரீரமாஸ்தாய கரோதி ஸர்வம் ।

ஸ்திரியன்ன பாஞுதி விசித்ர போகை:

ஸ ஏவ ஜாக்ரத் பரித்ருப்திமேதி || 14 ||

| | |
|---|---|
| (ஸ ஏவ மாயாபரி மோஹிதாத்மா) | = அந்த ஜீவாத்மாவே மாயையால் மயக்கப்பட்டு மாசுற்று |
| (சரீரமாஸ்தாய) | = உடலுக்குள் இருந்து கொண்டு |
| (கரோதி ஸர்வம்) | = எல்லாவற்றையும் செய்கிறது |
| (ஸ்திரியன்னபாஞுதி) | = ஸ்திரீ, ஆகாரம், மதுபானம் முதலிய |
| (விசித்ர போகை:) | = பலவிதமான கல்பித சுக போகங்களால் |
| (ஸ ஏவ) | = அதே ஜீவாத்மாவானது |
| (ஜாக்ரத்) | = விழிப்பு நிலையில் |
| (பரிதிருப்திமேதி) | = பரம திருப்தியடைகிறது |

14. அந்த ஜீவாத்மாவானது உடலுக்குள் இருந்து கொண்டு மாயையால் மயக்கப்பட்டு (மாசுற்று) எல்லா உலக வியவஹாரங்களிலும் ஈடுபட்டு கார்யம் செய்கிறது. விழிப்பு நிலையில் அது ஸ்திரீ, ஆகாரம், மதுபானம் முதலாய பலவிதமான வெளி சுக போகங்களில் பரம திருப்தியடைகிறது.

(மாயையின் சக்தியால் மயக்கப்பட்டு அவித்யா வாஸனைகள் முன்வர, ஜீவாத்மா உடலுடன் சேர்ந்து கொண்டு இந்திரியங்கள் மூலம் உலக வியவஹாரங்களில் கலந்து கொண்டு விழிப்பு நிலையில் ஸ்தூல சரீர போகங்களை அனுபவிக்கிறது.)



स्वप्ने स जीवः सुखदुःख भोक्ता

स्वमायया कल्पित जीवलोके ।

सुषुप्तिकाले सकले विलीने

तमोऽभिभूतः सुखरूपमेति ॥ १५ ॥

ஸ்வப்னே ஸ ஜீவ: ஸுகதுக்க போக்தா

ஸ்வமாயயா கல்பித ஜீவலோகே |

ஸுஷுப்தி காலே ஸகலே விலீனே

தமோऽபிபூத: ஸுகருபமேதி || 15 ||

| | |
|---|---|
| (ஸ்வப்னே) | = கனவு நிலையில் |
| (ஸ ஜீவ:) | = அந்த ஜீவாத்மா |
| (ஸுகது:க்க போக்தா) | = சுக துக்கங்கள் |
| (ஸ்வமாயயா) | = தன் மாயையின் தூண்டுதலினுல் |
| (கல்பித ஜீவலோகே) | = கற்பனை செய்யப்பட்ட கனவு உலகத்தில்; |
| (ஸுஷுப்தி காலே) | = (கனவற்ற) ஆழ்ந்த நித்திரையின் போது |
| (ஸகலே விலீனே) | = எல்லாம் மறைந்து இருக்கும் நிலையில் |
| (தமோऽபிபூத:) | = அறியாமை என்னும் இருளினுல் சூழப்பட்டவனுய் |
| ஸுகருப மேதி) | = ஆனந்த ரூபமாக இருக்கிருன் |

15. அந்த ஜீவாத்மா கனவு நிலையில் தன் மாயையால் தூண்டப்பட்ட (முன்னுல் உண்டாகிய பல பழைய உலக

அனுபவங்களின் ஞாபகத்தினுல் கற்பனே உலகில் சுக துக்கங்களே அனுபவிக்கிறுன். (கனவற்ற) ஆழ்ந்த நித்திரை கொண்டிருக்கும் பொழுது எல்லாவற்றையும் மறந்து அறியாமை என்னும் இருளினுல் சூழப்பட்டு ஆனந்த ரூபமாய் இருக்கிறுன்.

இந்த மந்திரத்தில், விழிப்பு நிலேக்கப்பால் உள்ள இரண்டு நிலேகளிலும் எந்த மாதிரி அனுபவங்கள் ஜீவனுக்கு உண்டாகின்றன என்று சொல்லப்படுகிறது. கனவு நிலேயில் ஸ்தூல உலகின் பலநாள் அனுபவங்கள் மனதில் நிலேகளாகப் பதிந்து மாயையால் கற்பனே உலகை உருவாக்கி வாஸனு மயமான ஸூக்ஷ்ம போகங்களே அனுபவிக்கிறது. ஆழ்ந்த நித்திரையில் ஒரு விதமான வெளி நினேவுமில்லாமல் எல்லாவற்றையும் மறந்து ஆனந்தம் குடி கொள்கிறது. இதை, ஞான நிலே வந்து விட்டதென்று சொல்வகற்கியலாது. ஏனெனில் மனதில் பக்குவம் ஏற்படும் வரை, அவித்தையாலாகிய வாஸனேகள் திரை போல் இருந்து கொண்டேயிருப்பதால் நித்திரை கலேந்தவுடன் மறுபடியும் தன் சரீர ம் நாம ரூபத்தோடு இணேத்துக் கொள்கிறது. ஆகையால் அவ்வித ஆனந்த நிலே தாற்காலிகமானதென்றும், இருள் சூழ்ந்த ஆனந்தம் என்றுமே கருத வேண்டும்.

पुनश्च जन्मान्तर कर्मयोगात्
स एव जीव: स्वपिति प्रबुद्ध: ।
पुरत्रये क्रीडति यश्च जीव:
ततस्तु जातं सकलं विचित्रम् ॥ १६ ॥

புனச்ச ஜன்மாந்தர கர்மயோகாத்
ஸ ஏவ ஜீவ: ஸ்வபிதி பிரபுத்த: ।



புரத்ரயே க்ரீடதி யச்ச ஜீவ:
ததஸ்து ஜாதம் ஸகலம் விசித்ரம் ॥ *16* ॥

| | |
|---|---|
| (புனச்ச) | = மறுபடியும் |
| (ஜன்மாந்தர கர்மயோகாத்) | = ஜன்மாத்திரத்திலுள்ள கர்ம பலன்களின் சம்பந்தத்தால் |
| (ஸ ஏவ ஜீவ:) | = அதே ஜீவன் |
| ஸ்வபிதி பிபுத்த:) | = விழித்து, மறுபடியும் கனவு நிலேயையோ, விழப்பு நிலேயை யோ அடைந்து சரீர, மனே புத்தியுடன் இணேக்கப்பட்டு |
| (புரத்ரயே) | = மூன்று நிலேகளிலும் (மறுபடியும்) |
| (க்ரீடதி) | = விளேயாடுகிறது |
| (யச்ச ஜீவ:) | = எந்த ஜீவனே |
| (ததஸ்து) | = அவனிடமிருந்தே (அந்த ஜீவனிடமிருந்தே) |
| (ஜாதம்) | = உண்டாகின்றது |
| (ஸகலம் விசித்ரம்) | = எல்லாவிதமான அனுபவங் களுள்ள உலகம் |

*16.* மறுபடியும், ஜன்மாந்திர கர்ம பலன்களால் அதே ஜீவன் நித்திரையிலிருந்து விழித்து கனவு நிலேக்கும், விழிப்பு நிலேக்கும் வந்து விடுகிறுன். பிறகு விழிப்பு, கனவு, நித்திரை – இம்மூன்று நிலேகளிலும் மாறி மாறி விளேயாடுவதால் அநாத்மஸ்வரூபமான அந்த ஜீவனிடமிருந்து பல விதமான அனுபவங்களுள்ள உலகம் உண்டாகின்றது.

ஒவ்வொரு நிலையிலும் உண்டாகிற அனுபவங்கள் வெவ்வேருக இருந்த போதிலும், இவ்வனுபவங்கள் அனைத்து உண்டாவது ஒரு ஜீவனுக்கே. ஆனல் ஒரு நிலையிலிருந்து மற்ருெரு நிலைக்குப் போவதாலோ, வெவ்வேறு அனுபவங்களுக் குள்ளாவதாலோ, ஜீவாத்மா மாறுதலடைவதில்லை. கடந்த ஜன்மங்களிலிருந்து தொடர்ந்து வரும் கர்ம பலன்களாலும், இந்த ஜன்மத்தில் உண்டாகிய அனுபவங்களின் நினைவுகள் மனதில் பதிந்திருப்பதாலும், ஸ்தூல சரீர அனுபவங்கள் மாதிரியே கனவிலும் ஸூக்ஷ்மரூபமாக உண்டாகின்றன என்பதையும் உணர்கிருன். ஜீவாத்மா ஸாக்ஷியாகவும் இருக்கிறான்.

இவ்வுண்மையை கீழே வரும் அடுத்த மந்திரம் எடுத்துரைக்கிறது.

आधारमानन्दमखण्डबोधं ।
यस्मिन् लयं याति पुरत्रयं च ॥ १७ ॥

ஆதாரமானந்த மகண்ட போதம்
யஸ்மின் லயம் யாதி புரத்ரயம் ச ॥ 17 ॥

(ஆதாரம்) = எல்லாவற்றிற்கும் அஸ்திவாரம் போலானதும்.

(ஆனந்தம்) = நிரதிசய ஆனந்த ஸ்வரூபமானதும்

(அகண்ட போதம்) = இடைவிடாத தன்னுணர்வாக

(யஸ்மின் லயம் யாதி) = எதற்குள் புகுந்து மறைந்து விடுகின்றனவோ



(புரத்ரயம் ச) = இம்மூன்று பட்டினங்களும் (விழிப்பு, கனவு, நித்திரை என்ற மூன்று நிலைகளும்)

17. அதே ஜீவன் தான் எல்லாவற்றிற்கும் அஸ்திவாரம் போலானதும், நிரதிசய ஆனந்த ஸ்வரூபமானதும் இடைவிடாத தன்னுணர்வாகவும் (இருக்கிறபடியால்), இம்மூன்று நிலைகளும் (பட்டினங்களும்) அந்த ஜீவனுக்குள் தான் புகுந்து மறைகின்றன. இது தான் துரீய நிலை என்று கூறப்படுகிறது.

ஞானி, தியானத்தால், மேற்கூறியபடி அந்த ஜீவாத்மாவே தனது சுயரூபத்தில் எல்லாவிடத்திலும் பரவியிருந்து, எப்பொழுதும் பற்பல அனுபவங்களுக்கு காரணமாயிருக்கிறது என்பதை உணர்கிருன். அதே தான் எல்லாவற்றிற்கும் ஆதாரமென்பதையும் அறிகிருன்.

एतस्माज्जायते प्राणो मन: सर्वेन्द्रियाणि च
खं वायुर्ज्योतिराप: पृथिवी विश्वस्य धारिणी ॥ १८ ॥

ஏதஸ்மாத் ஜாயதே ப்ராணோ
மன: ஸர்வேந்திரியாணி ச ।
கம் வாயுர் ஜ்யோதிராப:
ப்ருதிவீ விச்வஸ்ய தாரிணீ ॥ 18 ॥

(ஏதஸ்மாத்) = இவனிடமிருந்தே

(ஜாயதே) = உண்டாகிறது

(ப்ராண) = ப்ராணன்

(மன:) = மனமும்

(ஸர்வேந்திரியாணி ச) = எல்லா இந்திரியங்களும்

(கம்) = ஆகாசமும்

| | | |
|---|---|---|
| (வாயு:) | = | காற்றும் |
| (ஜ்யோதி:) | = | அக்னியும் |
| (ஆப:) | = | ஜலமும் |
| (ப்ருதிவி) | = | பூமியும் |
| (விச்வஸ்ய தாரிணீ) | = | எல்லா உலகனைத்தையும் தாங்கும் |

*18.* இவனிடமிருந்தே பிராணன் உண்டாகிறது. மனதும் மற்ற எல்லா இந்திரியங்களும், ஆகாசமும், காற்றும், அக்னியும், ஜலமும், எல்லா உயிர்களைத் தாங்கும் பூமியும் உண்டாகின்றன.

மாயையின் சக்தியால் பிரம்மத்துக்கு உபாதி ஏற்பட்டு எல்லா உயிர்களின் சிருஷ்டியும், அலைகளுக்கு செயல்படும் சக்தியும் (ரூபமும் சலனமும் சைதன்யமும்) உண்டாகிறது. இதனுல் உலகப் பொருள்களில் உணர்ச்சியோடும், நினைவுகளோடும் உலக வியவஹாரங்களில் ஜீவாத்மா ஈடுபட நேரிடுகிறது.

यत्परं ब्रह्म सर्वात्मा विश्वस्यायतनं महत् ।
सूक्ष्मात्सूक्ष्मतरं नित्यं तत्वमेव त्वमेव तत् ॥ १९ ॥

யத்பரம் பிரஹ்ம ஸர்வாத்மா
விச்வஸ்யாயதனம் மஹத் ।
ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரம் நித்யம்
தத்வமேவ த்வமேவ தத் ॥ 19 ॥



| | | |
|---|---|---|
| (யத்) | = | எது |
| (பரம் பிரஹ்ம) | = | பரப்பிரம்மமோ |
| (ஸர்வாத்மா) | = | எல்லாவற்றிலுமுள்ள ஆத்மாவோ |
| (விச்வஸ்ய) | = | உலகனைத்துக்கும் |
| (ஆயதனம் மஹத்) | = | பெரிய உறைவிடமோ |
| (ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரம்) | = | ஸூக்ஷ்மத்திலும் ஸூக்ஷ்மமானதால் எல்லாவற்றிற்கும் மூல காரணமானதும், எல்லாவற்றிலும் பரவியுள்ளதும் |
| (நித்யம்) | = | அழிவற்றதும் மாறுதலுமற்றதோ |
| (தத்வமேவ) | = | அந்த பரப்பிரம்மம் நீயே தான்! |
| (த்வமேவ தத்) | = | நீயே அந்த பரப்பிரம்மம் |

*19.* எல்லாவற்றிலுமுள்ள ஆத்மாவும், உலகனைத்தும் ஒரு பெரிய உறைவிடமானதும், எல்லாவற்றிற்கும் மூல காரணமானதும், எல்லாவற்றிலும் பரவியுள்ளதும், அழிவும் மாறுதலற்றதுமான அந்த பரப்பிரம்மம், நீயே தான், நீயே அந்த பரப்பிரம்மம்.

இது குருவின் மகாவாக்யம் சிஷ்யனுக்கு உறுதி கூறுவது போல் இரண்டு தடவை வற்புறுத்திக் கூறுகிறுர்.

जाग्रत्स्वप्नसुषुत्यादि प्रपच्चं यत्प्रकाशते ।
'तद्ब्रह्माहं' इति ज्ञात्वा सर्वबन्धै: प्रमुच्यते ॥ २० ॥

ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்த்யாதி
பிரபஞ்சம் யத்பிரகாசதே ।

'தத் பிரஹ்மாஹம்' இதி ஞாத்வா

ஸர்வபந்தை: பிரமுச்யதே || 20 ||

(ஜாக்ரத்) = விழிப்பு நிலையிலும்: (ஸ்வப்னே) கனவு நிலையிலும் (ஸுஷுப்த்யாதி) = ஆழ்ந்த நித்திரையிலும் (பிரபஞ்சம்) = (தோன்றும்) உலகானது (யத்) = எது (பிரகாசதே) = பிரகாசிக்கின்றதோ : (தத்) = அந்த: (பிரஹ்மாஹம்) = பிரம்மம் நான் (இதி) = என்று (ஞாத்வா) = அறிந்து; (ஸர்வபந்தை:) = எல்லா பந்தங்களினின்றும் (பிரமுச்யதே) = விடப்படுகிறான்.

20. விழிப்பு, கனவு, நித்திரை நிலைகளிலும் தோன்றும் உலகானது எதனால் பிரகாசிக்கின்றதோ அந்த பிரம்மம் நான் தான் என்றறிந்து எல்லா பந்தங்களினின்றும் விடப்படுகிறான்.

त्रिपु धामसु यद् भोग्यं

भोक्ता भोगश्च यद्भवेत् ।

तेभ्यो विलक्षण: साक्षी

चिन्मात्रोहं सदाशिव: ॥ २१ ॥

த்ரிஷு தாமஸு யத் போக்யம்

போக்தா போகச்ச யத்பவேத் |

தேப்யோ விலக்ஷண: ஸாக்ஷீ

சின்மாத்ரோஹம் ஸதாசிவ: || 21 ||

(த்ரிஷு தாமஸு = மூன்று நிலைகளிலுமுள்ள வியவஹாரங்களில்; (யத்) = எது; (போக்யம்) = அனுபவிக்க



வேண்டுமோ; (போக்தா) = (யார்) அனுபவிப்பவனோ;வு (யத் போகச்ச பவேத்) = எந்த அனுபவம் உண்டாகிறதோ, (தேப்யோ விலக்ஷண:) = அவைகளிலிருந்து வேறான; (ஸாக்ஷீ) = ஸாக்ஷியாயிருக்கிற ; (சின்மாத்ரோஹம்) = தூய உணர்வு தான் நான்; (ஸதாசிவ:) = நித்ய கல்யாணரூபனான மஹேச்வரன்.

21. மூன்று நிலைகளிலுமுள்ள வியவஹாரங்களில் எதை அனுபவிக்க வேண்டுமோ, யார் அனுபவிப்பவனோ (விச்வ தைஜஸ பிராக்ஞனோ) எந்த அனுபவம் உண்டாகிறதோ இவைகளினின்றும் வேறான ஸாக்ஷியான நித்ய கல்யாண ரூபனான மகேச்வரனுமான தூய உணர்வு தான் நான் (என்ற அறிவு உண்டாகும்)

கடோபநிஷத்தில் சொல்லியிருக்கிறபடி உலகுக்கெல்லாம் கண்ணாயிருக்கிற சூரியன் வெளியே உள்ள குண தோஷங்களால் எப்படி பாதிக்கப்படுவதில்லையோ அவ்வாறே எல்லா உயிர்களிடத்தும் உள்ளே இருக்கிற அந்த ஒரே அந்தராத்மா உலகத்துன்பங்களாலும் செயல்களாலும் பாதிக்கப் படாமல் அவைகளுக்கப்பால் நிற்கிறது. அது உடலுக்குள்ளிருந்து எல்லா கார்யங்களையும் நோக்கிக் கொண்டிருந்த போதிலும் ஸாக்ஷி போல் அந்த வியவஹாரங்களில் ஒன்றிலும் ஈடுபடுவதில்லை.

(கடோபநிஷத்து 5 – 11)

मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्टितम् ।

प्रयि सें लयं याति तद्ब्रह्मा द्वयमस्म्यहम् ॥ २२ ॥

மய்யேவ ஸகலம் ஜாதம் மயி
ஸர்வம் ப்ரதிஷ்டிதம்
மயி ஸர்வம் லயம் யாதி
தத்பிரஹ்மாத்வயமஸ்ம்யஹம் ।। 22 ।।

(மய்யேவ) = என்னிடத்திலேயே; (ஸகலம் ஜாதம்) = எல்லாம் பிறந்தது ; (மயி) = என்னிடத்தில் (ஸர்வம்) = எல்லாம் (பிரதிஷ்டிதம்) = நிலைத்திருக்கிறது ; (மயி) = என்னிடத்தே (ஸர்வம்) = எல்லாம் (லயம் யாதி) = கரைந்து விடுகிறது ; (தத் பிரஹ்மா) = அந்த பிரம்மமாக ; (அத்வயம்) = இரண்டற்ற (அஸ்ம்யஹம்) = இருக்கிறேன்.

22. என்னிடத்திலேயே எல்லாம் பிறந்தது. என்னிடத்தில் எல்லாம் நிலைத்திருக்கிறது ; என்னிடத்தே எல்லாம் கரைந்து விடுகிறது ; அந்த இரண்டற்ற பிரம்மம் தான் நான். (என்ற உணர்ச்சி உண்டாகும்.)

अणोरणीयनहमेव तद्वन्
महानहं विश्वमिदं विचित्रम् ।
पुरातनोऽहं पुरुषोऽहं ईश:
हिरण्मयोऽहं शिवरूपमस्मि ।। २३ ।।

அணோரணீயானஹமேவ தத்வன்
மஹாநஹம் விச்வமிதம் விசித்ரம் ।
புராதனோऽஹம் புருஷோऽஹம் ஈச:
ஹிரண்மயோऽஹம் சிவரூபமஸ்மி ।। 23 ।।



(அணோரணீயான்) = அணுவுக்கணுவாயும் ; (அஹமேவ) = நானே உள்ளேன்; (தத்வத்) = அதே மாதிரி; (மஹாநஹம்) = பெரியுமுள்ளேன் ; (விச்வமிதம் விசித்ரம்) = பலவிதமாகத் தோன்றும் இந்த விச்வமும் நானே ; (புராதனோऽஹம்) = மிக பழமையானவனும் நானே; (புருஷோऽஹம்) நானே அந்த பரம புருஷன். (ஈச:) = (நானே) அந்த ஸர்வேச்வரன் ; (ஹிரண்மயோऽஹம்) = பிரகாசமுள்ளவன்; (சிவரூபமஸ்மி) ஸ்ரீ மங்களகரமான சிவரூபமும் நானே.

23. அணுவுக்கு அணுவாயுமுள்ளவன் நான் அதே மாதிரி மிக பெரியதாகவும் உள்ளேன். பல விதமாகத் தோன்றும் இந்த உலகனைத்தும் நானே : மிகப் பழமையானவனும் நானே: பரம புருஷனும் ஸர்வேச்வரனும் நானே ; பொன் போல பிரகாசமுள்ளவனும் மங்களகரமான சிவரூபமாயுள்ளவனும் நானே.

கடோபநிஷத்தில் "அணுவுக்கு அணுவாயும் பெரிதுக்குப் பெரிதாகவும் உள்ள பிரம்மம் ஜீவனுடைய உள்ளத்தில் உறைகிறது" என்று சொல்லியருப்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். (கடோபநிஷத்து 2- 20)

பகவத் கீதையிலும் பகவான் பரம புருஷனை பற்றி இவ்வாறே கூறுகிறார் — "பழையோனை, ஆள்வோனை, அணுவைக்காட்டிலும், அணுவை ..... எவன் தியானம் செய்கிறானோ" என்று (கீதை VIII – 9)

अपाणिपादोऽहमचिन्त्यशक्ति:
पश्याम्यचक्षु: स श्रृणोम्यकर्ण: ।

नहं विजानामि विविक्तरूपो
न चास्ति वेत्ता मम चित्सदाऽहम् ॥ २४ ॥

அபாணிபாதோ஽ஹம் அசிந்த்யசக்தி:
பச்யாம்யசக்ஷு: ஸ ச்ருணோம்யகர்ண: ।
அக்ஷம் விஜானுமி விவிக்தரூபோ
ந சாஸ்தி வேத்தா மம சித்ஸதா஽ஹம் ॥ 24 ॥

(அபாணிபாதோ஽ஹம்) = கை கால்கள் இல்லாதவன் நான்
(அசிந்த்யசக்தி:) = எண்ணுதற்கரிய சக்தியுடையவன்
(பச்யாம்ய சக்ஷு:) = கண்ணில்லாமல் பார்க்கிறேன்
(ஸ ச்ருணோம்யகர்ண) = செவியில்லாமல் கேட்கிறேன்
(விவிக்த ரூப :) = எல்லாவற்றிலும் தனியான ரூபமுள்ளவன்
(அஹம் விஜாநாமி) = நான் எல்லாம் அறிவேன்
(ந சாஸ்தி வேத்தா மம) = என்னை அறிந்தோர் இல்லை
(சித் ஸதா஽ஹம்) = என்றும் நிலைத்துள்ள தூய உணர்வே நான்

24. கை கால்கள் இல்லாதவன் நான்; எண்ணுதற்கரிய சக்தி வாய்ந்தவன்; கண்ணில்லாமல் பார்க்கிறேன்; காதில்லாமல் கேட்கிறேன்; எல்லாவற்றிலும் தனியான ரூபமுள்ளவனுய் நான் எல்லாம் அறிவேன். என்னை அறிந்தோர் இல்லை ; என்றும் நிலைத்துள்ள தூய தன்னுணர்வே நான்.



ஞானேந்திரியங்களுக்கும், கர்மேந்திரியங்களுக்கும் இயலும் சக்தி ஆத்மாவிடமிருந்தே தான் கிடைக்கிறது என்றிருக்க, அது மனதின் எண்ணங்களிலோ, நினைவுகளிலோ, புலன்களின் செயல்களிலோ ஈடுபடுவதில்லை என்று சொல்வது மிகப் பொருத்தமானதே. ஆத்மா இவைகளையெல்லாம் கடந்த, ஸ்வயம் பிரகாசமான பரப்பிரம்மமே தான் என்பதும் உருவாகிறது. ஆனுல் ஆத்மாவை மனே புத்தியால் கண்டு கொள்ள முடியாது என்பதை பகவத் கீதையிலும் பகவான் எடுத்துக் காட்டியிருக்கிருர் — "இந்த ஆத்மாவை வியப்பென ஒருவன் காண்கிறன், வியப்பென ஒருவன் சொல்கிருன், வியப்பென ஒருவன் கேட்கிருன், இதனை அறிவான் எவனுமிலன்" – (கீதை II - 29)

ஆகையால் ஆத்ம ஞானம் என்பது, நேரிடையான ஸ்வானுபவத்தால் அறியக் கூடியது என்றுரைக்கப்படுகிறது. இடைவிடாத ஆராய்ச்சியாகவும், தியானத்தாலும் இந்த அனுபவம் தானுகவே உண்டாகும் என்பதையும் உறுதி கூறுவது போல் கருத்து.

கேனேபநிஷத்திலும் இதே உண்மைகளை விவரமாக்க கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். (1,2 – 1,8)

वेदैरनेकैरहमेव वेद्यो
वेदान्तकृद् वेदविदेव चाहम् ॥ २५ ॥

வேதைரநேகை ரஹமேவ வேத்யோ
வேதாந்தகிருத் வேத விதேவசாஹம் । 25 ।

(வேதைரநேகை;) = எல்லா வேதங்களாலும்
(அஹமேவ வேத்ய;) = அறியப்பொடும் பொருள் யானே
(வேதாந்தக்ருத்) = வேதாந்தத்தை ஆக்கியோனும்

(வேத விதேவசாஹம்) = வேதங்களை உணர்ந்தோனும் நானே !

25. எல்லா வேதங்களிலும் அறியப்படும் பொருள் யானே. வேதாந்தத்தை ஆக்கியோனும் நானே. வேதங்களை உணர்ந்தோனும் நானே.

இதற்கு பகவத் வசன பிரமாணமே இருக்கிறதென்பது பகவத் கீதையிலிருந்தும் தெரிகிறது. (கீதை XV-15)

न पुण्यपापे मम नास्ति नाशो
न जन्मदेहेन्द्रियबुद्धिरस्ति ।
न भूमिरापो मम वह्निरस्ति
न चानिलो मेऽस्ति नचाम्बरं च ॥ २६ ॥

ந புண்ய பாபே மம நாஸ்தி நாசோ
ந ஜன்ம தேஹேந்திரிய புத்திரஸ்தி ।
ந பூமிராபோ மம வஹ்னிரஸ்தி
ந சாநிலோ மேஸ்தி ந சாம்பரம் ச ॥ 26 ॥

| | |
|---|---|
| (ந புண்ய பாபே) | = புண்ய பாபங்களில்லை |
| (மம நாஸ்தி நாசோ) | = எனக்கு அழிவுமில்லை |
| (ந ஜன்ம தேஹேந்திரிய புத்திரஸ்தி) | = பிறப்பு, உடல், இந்திரியங்கள் புத்தி - இவை எனக்கில்லை |
| (ந பூமி) | = பூமியும் இல்லை; |
| (ந ஆபோ) | = ஜலமும் இல்லை; |
| (ந மம வஹ்னிரஸ்தி) | = எனக்கு அக்னியும் இல்லை |
| (ந சாநிலோ) | = காற்றுமில்லை; |
| (ந சாம்பரம் மே அஸ்தி) | = ஆகாசமுமில்லை எனக்கு |



26. எனக்கு புண்ய பாபங்களுமில்லை; அழிவுமில்லை, பிறப்பு,உடல், இந்திரியங்கள், புத்தி என்றவையுமில்லை பூமியில்லை, ஜலமும் இல்லை, அக்னியில்லை, காற்றில்லை, ஆகாசமுமில்லை.

பாவம் புண்யமெல்லாம், அறியாமையினுலுண்டான வாசனைகளால் ஏற்படும் உடல் புலன்களைச் சேர்ந்த அனுபவங்கள். ஐம்புலன்கள், மனுே, புத்தி, அகந்தைகளைக் கடந்தவனுக்கு, வாஸனைகளில் ஒரு ஈடுபாடும் இல்லை. ஆகையால் அவன் புண்ய பாவங்களைக் கடந்தவனுகிருன். பரம் பொருளுடன் ஐக்கியமாகிய ஜீவனுக்கு பஞ்ச பூதங்களாலாகிய (பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாசம்) உலகத்துடன் தொடர்பு விட்டு அந்த வ்யவஹாரங்களினுல் ஆவது ஒன்றுமில்லை. ஆகையால் அந்த ஜீவன் - பரப்பிரம்ம ஐக்கியத்தினுல் உண்டாகும் சிதானந்தத்தைத் தவிர வேறு ஒரு அனுபவமும் கிடையாது என்பதை வற்புறுத்துகிறது. இம்மாதிரியான உபதேசத்துக்கு அத்யாரோப அபவாதம் என்று பெயர். அதாவது பிரபஞ்சத்தைப் பற்றிக் கூறிவிட்டு, அதைத்தவிர்த்து, உலகம் மித்யை சத்யமல்ல என்பதைக் காட்டுகிருர்.

एव; विदित्वा परमात्मरूपं
गुहाशयं निष्कलमद्वितीयम् ।
समस्तसाक्षिं सदसद्विहीनं
प्रयाति शुद्धं परमात्मरूपम् ॥ २७ ॥

ஏவம் விதித்வா பரமாத்மரூபம்
குஹாசயம் நிஷ்கலமத்விதீயம் ।
ஸமஸ்த ஸாக்ஷிம் ஸதஸத்விஹீனம்
பிரயாதி சுத்தம் பரமாத்மரூபம் । 27 ।

—

(ஏவம் விதித்வா) = இவ்வாறு அறிந்து
(பரமாத்ம ரூபம்) = பரம்பிரம்மத்தை
(குஹாசயம்) = ஹ்ருதய கமலத்தில் குடியிருப்பதும்
(நிஷ்கலம்) = பிரிவற்றதும்
(அத்விதீயம்) = இரண்டற்றதும்
(ஸமஸ்தஸாக்ஷிம்) = எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியானதும்
(ஸதஸத்விஹீனம்) = மெய் பொய் என்ற வேறுபாடில்லாததும் (இருப்பது, இல்லாதது இவையிரண்டுக்கும் அப்பாற்பட்டதும். (காரண கார்ய விலக்ஷணமானதும்)
(சுத்தம்) = பரிசுத்தமானதுமான
(பரமாத்மருபம்) = பரப்பிரம்மருபத்தையே
(பிரயாதி) = அடைகிருன்

27. அந்த பரப்பிரம்மத்தை இவ்வாறு அறிந்து, ஹ்ருதய கமலத்தில் நிலேத்திருப்பவனும், பிரிவற்றவனும், இரண்டற்ற வனும், மெய் பொய் என்றில்லாதவனும், பரிசுத்தமானவனு மான பரப்பிரம்ம ருபத்தையே அடைகிருன்.

அதாவது, பரப்பிரம்மத்தையே அடைய வெளியே தேடுவதற்கவசியமில்லே. ஹ்ருதய கமலத்தில் என்றும் ஸ்வயம் பிரகாசத்தோடு குடியிருக்கும் ஆத்மாவை தன்னுள்ளேயே தியானித்து, அறிந்து பரம் பொருளுடன் உள்ள ஐக்கியத்தை உணரலாம் என்று மறுபடியும் உறுதி கூறி முடிக்கிருர்.



यः शतरुद्रीयमधीते सोऽग्निपूतो भवति, वायुपूतो भवति, सुरापानात्पूतो भवति, ब्रह्महत्यात्पूतो भवति, सुवर्णस्तेयात्पूतो भवति, कृत्याकृत्यात्पूतो भवति । तस्मादविमुक्तमाश्रितो भवति । अत्याश्रमी सर्वदा सकृद्वा जपेत् । अनेन ज्ञानमवाप्नोति संसारार्णव नाशनं । तस्मादेनं विदित्वैनं कैवल्यं फलमश्नुते, कैवल्यं फलमश्नुत इति ॥ २८ ॥

யஃ சதருத்ரீயமதீதே ஸோக்னிபூதோ பவதி; வாயு பூதோ பவதி; ஸுராபாஞத் பூதோ பவதி; பிரஹ்மஹத்யாத் பூதோ பவதி; ஸுவர்ணஸ்தேயாத் பூதோ பவதி; க்ருத்யா க்ருத்யாத் பூதோபவதி; தஸ்மாதவிமுக்தாச்ரிதோ பவதி | அத்யாச்ரமீ ஸர்வதா ஸக்ருத்வா ஜபேத் | அநேன ஞானம் அவாப்னோதி ஸம்ஸாரார்ணவ நாசனம் | தஸ்மாதேனம் விதித்வைனம் கைவல்யம் பலம் அச்னுதே கைவவ்யம் பலம் அச்னுதே, இதி || 28 ||

28. எவனெருவன் சதருத்ரீயத்தை அத்யயனம் செய்கிருனே, அவன் அக்னியால் தூய்மை செய்யப்பட்ட வனுகிருன். காற்றினுல் தூய்மை செய்யப்படுகிருன். மதுவை அருந்தின பாபத்தினின்றும் தூய்மை ஆக்கப் பெறுகிருன். பிரம்மஹத்யாதோஷத்தினின்றும் விடுதலே பெறுகிருன். தனத்தைத் திருடுவதாலான தோஷத்தினின்றும் விடப் பெறுகிருன். தவறுகள் செய்தாலும், உற்ற கடமைகள் செய்யாததாலும் உண்டாகிற தோஷத்தினின்றும் காப்பாற்றப் படுகிருன். இதனுல் பரமாத்மாவாகிய தனது சுயருபத்தை அறிந்து தன்னிலேயிலே நிலேத்தவனுகிருன்.

எல்லாவற்றிற்கும் மேலான ஆச்ரமமாகிய ஸந்நியாஸ யோக்திலுள்ளவன் (இம்மந்திரத்தை) எப்பொழுதும் அல்லது தினம் ஒரு முறையாகிலும் ஜபம் செய்ய வேண்டும். இதனுல் பிறப்பும் இறப்பும் மாறி மாறி வரும். ஸம்ஸாரக் கடலிலிருந்து முக்தி பெற ஹேதுவான பிரம்ம ஞானத்தை அடையலாம். இவ்வாறு, இந்த ஞானம் பெற்று கைவல்யமாகி மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைந்து நித்தியானந்தத்தைப் பெற முடியும்.

"इति अथर्व वेदे कैवल्योप निषत्समाप्ता"

"இதி அத்ர்வ வேதே கைவல்யோபநிஷத்ஸமாப்தா।"

என்று அதர்வ வேதத்தில் கைவல்யோபநிஷத்து முற்றிற்று.

இந்த 28-வது மந்திரம் உபநிஷத்துக்கு ஒரு "பலச்ருதி" யாக அமைந்துள்ளது. இதன் உத்தேசம் யாதெனில், உள்ளத் தூய்மை முற்றிலும் பெறுவதற்கு உதவி செய்து தூய்மையை உண்டாக்கி, பிறகு உபநிஷத்தின் பலனைப் பெற வழிகாட்டுவதாகும்.

மஹா வாக்யத்தில் "நீயே அந்த பரப்பிரம்ம். அந்த பிரம்மமே நீ தான்" என்று கூறிய பின்னர் "பலச்ருதி" க்கு அவசியமுண்டா, தகுதியாகுமா என்ற சந்தேகம் எழக்கூடும். நாம், சாத்திரங்களில் பல இடங்களில் இம்மாதிரி "பலச்ருதி" யைப் பார்த்திருக்கலாம். ஏன் ! வால்மீகி இராமாயணத்திலும் கூடத்தான் காணப்படுகிறது.



உபநிஷத்தைப் படித்து, புத்தியினுல் மட்டும் அதன் அர்த்தத்தை ஒரு தடவை கிரகித்துக் கொண்டால் போதாது, தொடர்ந்து படித்து, குரு முகமாகக் கேட்டு, சிந்தித்து ஆராய்ந்து, தியானம் செய்து ஆத்ம விசாரத்தில் ஈடுபடுவதற்கும், உற்சாகமளிப்பதற்கும், உள்ளத் தூய்மையை முற்றிலும் பெறுவதற்காகவும் கூறப்பட்டிருக்கிறதென்று கொள்ளலாம். அப்பொழுது தான் பகவானின் அருள் பெற்று, விரைவில் உள்ளதூய்மை அடைந்து, மஹாவாக்யத்தில் கூறியவாறு அனுபவம் உண்டாகும்.

பிரம்மஹத்யா செய்து கோபத்தினுல் உண்டாகும் செயல், திருட்டு, விருப்பத்தினுலும் பேராசையினுலும் செய்யப்படும் செயல். அதே மாதிரி செய்யத் தகாததைச் செய்வது. செய்யவேண்டியன செய்யாமலிருப்பது என்பவையெல்லாம் அச்சம், கர்வம், பொருமை இவைகளால் உண்டாகிறது. இம்மாதிரிக் கெட்ட குணங்களையும், உணர்ச்சிகளையும் களைந்து, உள்ளத் தூய்மை அடைந்தால் தான் ஆத்ம விசரரம் பலன் கொடுக்கக்கூடும். ஆகையால் தான் இந்த உபநிஷத்தை தினந்தோறும் விடாது படித்து தியானம் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் ஞானம் பெற முடியும் என்பதை இந்த 28-வது மந்திரம் தெளிவாக்குகிறது.

शान्ति पाठ:

ओं भद्रं कर्णेभि: श्रृणुयाम देवा: । भर्द्र पश्प्रेमाक्षभिर्यजत्रा: । स्थिरैरङ्गैस्तुष्टुवाँसस्तनूभि: । व्यशेम देवहितं यदायु: । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवा: स्वस्ति न: पूषा विश्ववेदा: । स्वस्ति न स्तार्क्ष्यो अरिष्टनेमि: । स्वस्ति नो बृहस्पतिर्दधातु ।

ओं शान्ति: शान्ति: शान्ति: ॥



## விற்பனையாகும் இதர நூல்கள்

### ☞ ஜோஸ்யம் - Astrology ☜

| | |
|---|---|
| 1999ஆம் ஆண்டு ராசிபலன் (12 ராசிகளுக்கும்) | 15.00 |
| சனிப்பெயர்ச்சிப் பலன்கள் (16.4.1998 முதல் 5.6.2000வரை) | 15.00 |
| ஜோஸ்யம் கற்றுக்கொள்ளுங்கள் | 57.00 |
| ஜோதிடக் கலைக்களஞ்சியம் – அறிந்த சொற்களும் அறியாத விவரங்களும் | 69.00 |
| பிறந்த நாள் ஜோஸ்யம் | 11.00 |
| உங்கள் லக்னப் பலன்கள் | 33.00 |
| நல்ல காரியங்களைச் செய்ய நல்ல நேரங்களைத் தேர்ந்தெடுப்பது எப்படி? | 21.00 |
| பல்வகை ஆரூடங்களும் உங்களுக்கான பலன்களும் | 10.00 |
| தமிழ் வருடங்கள் அறுபதும், அவற்றில் பிறந்தவர்களுக்கான பலன்களும் | 24.00 |
| பஞ்சபட்சி சாஸ்திரம் பார்ப்பது எப்படி? | 33.00 |
| பிரச்ன ஆரூட இரகசியங்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | 10.00 |
| கோட்சார பலன்களைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளும் முறைகள் | 60.00 |
| காலச் சக்கர திசை | 14.00 |
| மூச்சு ஜோதிடம் பார்ப்பது எப்படி? | 10.50 |
| மேலைநாட்டு ஜோதிடர்கள் சொல்லும் ஜோதிடம் | 37.00 |
| கிரேக்க ஜோதிடமும், அணுகுமுறையும் | 45.00 |

### ☞ ஜாதகம் - Horoscope ☜

| | |
|---|---|
| ஜாதகம் பார்ப்பது எப்படி? | 49.00 |
| ஜாதகம் இல்லாதவர்கள் ஜாதகம் பார்ப்பது எப்படி? | 13.50 |
| திருமணப் பொருத்தம் பார்ப்பது எப்படி? | 39.00 |
| நவக்கிரகங்களும் அவற்றிற்குரிய தோஷப் பரிகாரங்களும் | 28.00 |
| கூட்டுக் கிரகப் பலன்கள் | 32.50 |
| குழந்தைகளுக்கு வரும் பாலக்கிரக தோஷமும் பரிகாரங்களும் | 25.00 |
| நிராயன துவாதச பாவஸ்புடக் கணிதம் | 43.00 |
| கிரகங்கள் பேசுகின்றன! | 28.00 |

# விற்பனையாகும் இதர நூல்கள்

## பக்தி - **Pias**

தெய்வ நம்பிக்கையும் தெளிவுமிக்க வாழ்க்கையும் .... 18.00
சந்தியாவந்தனம் செய்வது எப்படி? .... 13.00
அஷ்டலட்சுமிகள் வரலாறும் வழிபாடும் .... 17.00
இந்துப் பண்டிகைகளின் வரலாறும்
வழிபாட்டு முறைகளும் .... 9.50
சர்வதோஷ நிவர்த்தி தரும் சர்வேஸ்வரன்
சிவன், சங்கரன் வழிபாடு .... 11.00
எந்தக் காரியம் வெற்றி பெற எந்தக் கடவுகளை
எப்படி வணங்க வேண்டும்? .... 31.00
ஆன்மீக ஐயங்களும் விடைகளும் .... 18.00
ஆன்ம ஞான இரகசியம் - பி.ஏ. பகவத்சிங் .... 17,00
ஆன்மாவை தரிசியுங்கள் .... 27.00
பயன்மிகு ஹோமங்கள் .... 20.00
Kandar Anubuti .... **20.00**
(Direct Congnition of Supreme Bliss)
ஸ்ரீ ஷிர்டி சாய்பாபா ....

## புராணம் - **Mythology**

சிவ புராணம் .... 34.00
கந்த புராணம் .... 93.00
விஷ்ணு புராணம் .... 39.00
அனுமார் புராணம் .... 39.00
பிள்ளையார் புராணம் .... 49.00
விநாயகரும் விநோதச் செய்திகளும் .... 17.00
நாரதர் புராணம் .... 25.00
சூரிய புராணம் .... 23.00
திருவிளையாடற் புராணம் .... 48.00
மார்க்கண்டேயர் அருளிய புராணம் .... 33.00
தேவி பாகவதம் .... 42.00
ஐயப்பன் புராணமும் பாடல்களும் .... 22.00
பரந்தாமனின் பத்து அவதாரங்கள் .... 34.00
மகாபாரதம் - பாகம் 1 .... 61.50
பாகம் 2 .... 57.00
மகாபாரத உபதேசக் கதைகள் .... 22.00
மகாபாரதச் சிறுகதைகள் .... 16.00
புராணச் சிறுகதைகள் .... 16.00
திருப்பதி வெங்கடாசலபதியின் வரலாறும்
வழிபாட்டு முறைகளும் .... 24.00
காளஹஸ்தி தலபுராணமும் பெருமைகளும் .... 33.00
தேவி கருமாரியம்மன் வரலாறு .... 29.00

